# ஸ்ரீ மீனுட்சி கல்யாணம்

ஸ்ரீராமகதா ரத்னம்
V. தியாகராஜன்





ஸ்ரீராமகதா நிலையம்
புதுக்கோட்டை - 2.
1965

# சமர்ப்பணம்

—o—

செந்தமிழ்ச் சொக்கனும் அம்மை மீனாட்சியும் அளவில்லாத கருணையுடன் எனக்கு வாழ்க்கையில் பல நன்மைகளைச் செய்ததுடன், அளவிடமுடியாத அன்பர்களை எனக்கு அளித்துள்ளனர். அப்பேர்ப்பட்ட அன்பர்களில் ஒருவர் ஸ்ரீ செட்டிநாட்டரசர் அவர்களின் அந்தரங்கக் காரியதரிசியான ஸ்ரீமான் V. வைத்திய சுப்ரமண்ய அய்யர் B. A., அவர்கள். அடியேனுடைய 174-வது இராமாயணச் சொற்பொழிவை ராஜா அண்ணாமலைபுரத்தில் நிறைவேறச் செய்து 14-8-62 அன்று இரவு நடந்த பட்டாபிஷேகத்தில் மந்திரி கனம் ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களின் தலைமையில் ஸ்ரீ செட்டிநாட்டரசர் அவர்களால் பொன்னாடைப் போர்த்தச் செய்தார். என் வாழ்க்கையிலேயே ஒரு அரசரும் மந்திரியும் சேர்ந்து கலந்துகொண்ட பட்டாபிஷேகம் இது. யாவற்றிற்கும் மேலாக எனக்கு ஒரு பேராபத்து நேர இருந்த காலத்து என் கண்ணீரைத் துடைத்துக் கவலையை மாற்றிய கருணாமூர்த்தி. அவர்கள் நீடூழி காலம் வாழுமாறு பிரார்த்தனை செய்துகொண்டு இப்புத்தகத்தை ஸ்ரீமான் **V. வைத்திய சுப்ரமண்யம் தம்பதிகளுக்கு** எனது நன்றி, அன்பு இவற்றின் அடையாளமாகச் சமர்ப்பித்துக் கொள்ளுகிறேன்.

வாழ்க!

ஸ்ரீராமகதா V. தியாகராஜன்.

ஸ்ரீ ராமகதா நிலையம் சமய இலக்கிய வெளியீடு நிர். 1.

# ஸ்ரீ மீனாட்சி கல்யாணம்

(சென்னை அரசாங்க முதலமைச்சர் கனம்
ஸ்ரீ M. பக்தவத்சலம் அவர்கள் எழுதிய
முகவுரையுடன்கூடியது)



கோவை-ஸ்ரீ ராமகதாரத்னம்-கம்பர் கவிமுழக்கம்- கம்பன் வல்லான்-
கம்பன் கவிச்சந்தமேகம்-கம்பன் கவிச்செல்வன்-கம்பன் அபிநவகாள
மேகம்-கம்பன் கதிரொளி- கம்ப ராமாயண ஜோதி-முத்தமிழ்வித்தகர்

**கம்பக் கலைமணி V. தியாகராஜன் எழுதியது.**



வெளியீடு:

**ஸ்ரீ ராமகதா நிலையம்**

புதுக்கோட்டை-2.

1965.

# தமிழ் நாட்டு அரசாங்கம்

**எம். பக்தவத்ஸலம்**
முதலமைச்சர்

**செயின்ட் ஜார்ஜ் கோட்டை**
சென்னை-9
8-7-65



*திரு வி. தியாகராஜன் அவர்கள் எழுதிய "ஸ்ரீ மீனாட்சி கல்யாணம்" என்ற இந்நூலைப் பார்த்தேன். தமிழ்த்தாய் வணக்கத்துடன் தொடங்குகின்ற இந்நூல் திருவிளையாடற் புராணத்தை அடிப்படையாகக் கொண்டு உலக மாதாவாகிய மீனாட்சி அம்மையின் திருமணத்தை இனிய எளிய தமிழில் அழகாக எடுத்துச் சொல்கிறது. நூலினிடையே பல்வேறு தமிழ் நூல்களிலிருந்து மேற் கோள் பாடல்கள் எடுத்துத் தரப்பட்டுள்ளன.* கூடுமான வரை ஒவ்வொரு பாடலின் அடியிலும் அப்பாடலின் திரண்ட பொருளைத் தந்திருப்பது படிப்போருக்கு ஓரளவு உதவி செய்வதாகும்.

*இறைவன் அடியார்களுக்காகத் தன்னுடைய எல்லையற்ற பெருமையை விட்டுக் கொடுத்து, மனமிரங்கி வந்து அருள் செய்வதை "இறைவனுடைய எளிவந்த தன்மை" என்று கூறுவார்கள். வைஷ்ணவர்கள் இதையே ஆண்டவனுடைய "சௌலப்யம்" என்று கூறு வார்கள். அத்தகைய சௌலப்பியத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டாக விளங்குவது அண்டங்கள் அனைத்தை யும் படைத்து, காத்து, அளித்து, அழிக்கின்ற லோகமாதா வானவள் மானிட வடிவம் தாங்கி மதுரையில் வந்து வளர்ந்து மக்களுக்கு அருள் செய்தாள் என்ற இந்த வரலாறு. ஆண்டவனுடைய சௌலப்பியத்தை இவ்வளவு தெளிவாக எடுத்துக் கூறுவதன்நோக்கம் என்னவென்றால் மக்கள் தங்களுடைய சிறுமையை நினைந்து, அதே நேரத்*

தவத்திரு மகரிஷி யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்
“ஸ்ரீ மீனாட்சி கல்யாணம்” படித்த மகிழ்ச்சியில்
அனுப்பியுள்ள

# வா ழ் த் து ப் பா



வடக்கும் தெற்கும் வளமுற நமது
பாரதசக்தி பரசிவச் சுடர் பெற
மங்கல மான மதுரைச் சொக்கர்
வீரத் திருவாம் மீனாட்சி யுடன்
நன்மணங் குலவிப் பொன்னுடன் மணிபோல்
மதுரைப் பதியின் மக ராசராகி
அன்பரை நன்முறை அருளின் ஆண்ட
புராணக் கதையைப் பொலிவுற நாட்டிய
பழங்கவிப் புலவர் பாவினங் தேர்ந்தே
அணிபெறக் கோத்தே அழகிய தமிழுரை
மணியெனத் துலக்கி மருவறு நூலைத்
தந்தான் அன்புத் தியாக ராசன்
கம்பக் கவியிற் கவிதுளக் குற்றேன்
கேட்கக் கேட்கக் கேட்க வேண்டுமெனும்
வேட்கை எழுப்பும் வித்தகப் புலவன்
கோத்து நன்றளித்த கொழுஞ்சுவை நூலாம்
மீனாட்சி திருமணம் வீறுபெற் றொளிர
அம்மை யப்பன் அருட்பெருஞ் சோதியின்
இன்பக் கருணையை இறைஞ்சுதும் யாமே.

யோகசமாஜம்
ஸ்ரீராம் நகர்
சென்னை-20


சுத்தானந்த பாரதி
13-7-65

(சென்னை "கலைமகள்" ஆசிரியர் அவர்கள் அருளிய வாழ்த்து.)

கி. வா. ஜகந்நாதன்
''காந்தமலை''

கல்யாண நகர்,
சென்னை-28
16-7-65

தேனூட்சி செய்வேம்பன் தெய்வத் திருமகளாம்
மீனாட்சி மன்றல் விரித்துரைத்தான்—மானூட்சி
ஆர்ந்தகரத் தான்மகனுக் கன்புடையான் பல்விருது
சார்ந்த தியாகரா சன்.

கம்பன் கவிமுதலாம் காவியஞ்சேர் நற்கதைகள்
இம்பர் எவரும் இனிதுணரப்—பம்புசுவை
அண்ணவிரிக் கும்தியாக ராசன்வரைந் தான்மீனக்
கண்ணியின் மன்றற் கதை.

பரஞ்சோதி பாடற் பரிசும் பிறர்தம்
தரஞ்சேர் கவிதைத் தகையும்—நிரந்தார
நல்ல உரைநடையில் நல்கினன் தண்டமிழ் நாட்
டெல்லவரும் கொள்ள இனிது.

இராமகதா ரத்னமெனும் ஏற்றத்தான், வேலன்
விராவுகம லப்பாதம் மேவிப்—பரவுகின்ற
உள்ளத் தியாகரா சன்சீர் உயருகவே
வெள்ளமென எங்கும் மிளிர்ந்து,

கி. வா. ஜகந்நாதன்.

# முன்னுரை

“உலக மாதாவான பார்வதி தேவி மீனுட்சி என்ற பெயருடனும், சிவபெருமான் சோமசுந்தர பாண்டியன் என்ற பெயருடனும், முருகப்பெருமான் உக்கிரகுமார பாண்டியன் என்ற பெயருடனும், மதுரையைத் தலை நகராகக்கொண்டு அரசாட்சி செய்யத் தென்னுட்டிற்கு வந்தது தமிழின் பெருமையை அனுபவிக்க என்ருல் தமிழின் பெருமையை யார் கூற முடியும்” என்கிருர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்.

அவ்வாறு இறைவனும் இறைவியும் திருமணம் புரிந்துகொண்ட வரலாறு திருவிளையாடற் புராணத்தில் வருகிறது. திருவிளையாடற்புராணம் எழுதிய பரஞ்சோதி முனிவர், “ஒரு திருவிளையாடலை பக்தியுடன் கேட்டாலும் நீண்ட ஆயுளும் குறைவற்ற செல்வமும் அடைவர். மண முடிக்கப்பெற்று மகப்பேறடைவர். நோயில்லாது வாழ்வார்” எனக் கூறுகிருர்.

அடியேன் என் இளமைக் காலத்தில் மதுரையில் வசிக்கும் பேறு பெற்றேன். மீனுட்சிசுந்தரேசுவரர்களிடம் அடியேன் மிகுந்த பக்தியுடையவன். என் குருநாதர் ஸ்ரீ *N. R.* கிருஷ்ணசுவாமி அய்யங்கார் அவர்கள் மதுரையில் வசிக்கிருர். என் அன்னையார் மதுரையில் பிறந்தவர். என் அன்னையையும் குருநாதரையும் எனக்கு அளித்த மதுரையம்பதியில் நான் வசித்ததால் தான் ஸ்ரீ மீனுட்சியம்மையின் திருவருள் பெற்று சிறிது தமிழறிவு பெற்றதாக நினைக்கிறேன். மதுரை எனக்கு வாழ்க்கையில் ஒளியை உண்டாக்கியது. அனேகருக்கு இம்மாதிரி அனுபவம் உண்டு. அவ்வளவு பெருமை பொருந்திய மதுரையின் நாயகியாம் ஸ்ரீ மீனுட்சியம்மையின் திருமணம் பற்றிய புத்தகத்தை அன்பர்கள்

படித்து அம்மையினருளால் சகல செல்வயோகமிக்க சுக வாழ்வு வாழ வேணுமென்ற எண்ணத்துடன் வெளியிடுகிறேன்.

இதற்கு முகவுரையளித்துள்ள நமது சென்னை முதன் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் சேக்கிழார் (பெரிய புராணம் எழுதியவர்) மரபில் பிறந்தவர்கள். கும்பகோணம், விழுப்புரம் முதலான இடங்களில் பொன்னுடை போர்த்தியும், பல இடங்களில் அடியேனுடைய சொற்பொழிவிற்குத் தலைமை வகித்தும் ஆசி கூறி என்னை ஊக்குவித்துள்ளார்கள். எனது நலனில் மிக அக்கரையுள்ளவர்கள். நாட்டின் பல திட்டங்களின் காரணமாக மிகமிக அதிகமான வேலைத் தொந்திரவுக்கு இடையே எனது புத்தகத்தைப் படித்து முகவுரை அளித்து ஆசி கூறியுள்ள அவர்களுக்கு எனது உளங்கலந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அவர்கள் எழுதியுள்ள முகவுரையை சேக்கிழார் பெருமான் என் தமிழ்ப் பணி நன்கு நடைபெறக் கூறியுள்ள ஆசியுரையாக ஏற்று மகிழ்ச்சியடைகிறேன்.

இதற்கு ஆசி கூறி "வாழ்த்துப்பா" எழுதியனுப்பியுள்ள கவியோகி மகரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரவர்கள் எனது நூல்களை முழுதும் படித்தும், சிலவற்றிற்கும் முகவுரையளித்தும் ஆசி கூறியுள்ளார்கள். அவர்களின் வாழ்த்துப்பாவினைத் திருவிளையாடற் புராணம் எழுதிய பரஞ்சோதியின் வாழ்த்தாகவே எண்ணி அவர்கட்கு எனது நன்றியைச் செலுத்திக் கொள்ளுகிறேன்.

இப்புத்தகத்தைக் கண்ணுற்று எனக்கு ஆசி கூறிச் சில பாடல்களை எழுதியுள்ள கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகன்னாதன் அவர்கள் நமது தமிழ்த்தாத்தா

டாக்டர் ஸ்ரீ சுவாமிநாதய்யர் அவர்களின் சீடர் என்பதை யாவரும் அறிவர். இப்பெரியாருடைய ஆசியைக் கலைமகளின் ஆசியாகவும், தமிழ்த்தாத்தாவின் ஆசியாகவுமே எண்ணி அவர்கட்கு எனது நன்றியைச் செலுத்திக்கொள்கிறேன்.

இப்புத்தகம் வெளியாவதற்கு அநேக நண்பர்கள் உதவினர். முக்கியமாக எனது நலத்தில் அக்கறை கொண்டு சென்ற சில காலமாக எனக்குத் தமிழ்ப்பணியில் ஊக்கமளித்து இப்புத்தகம் வெளியாகப் பொருளுதவி செய்தவராகிய திரு *N.* மகாலிங்கம் *M. L. A.* (பொள்ளாச்சி) அவர்கட்கு என் நன்றியைத் தெரிவிக்கிறேன்.

இப்புத்தகத்தில் தனது பாடல்களில் சிலவற்றை மேற்கோளாகக் காட்ட அனுமதித்த கோவை வித்வான் கவியரசு ஸ்ரீ நடேசக் கவுண்டர் அவர்கட்கு எனது நன்றி.

இப்புத்தகத்தைத் தக்க சமயத்தில் வெளியிட உதவியாக வெகு விரைவில் அழகாக அச்சிட்டு உதவிய புதுக்கோட்டை செந்தமிழ்ப் பதிப்பகத்தாருக்கு எனது நன்றி.

இதில் உள்ள குற்றங்களை நீக்கிக் குணத்தைக் கொண்டு எனக்கு ஆதரவளிக்குமாறு அன்பர்களை வேண்டிக் கொள்ளுகிறேன்.

*வெற்றிவேலுற்ற துணை!*

ஸ்ரீராமகதா நிலையம்
புதுக்கோட்டை-2
1—9—1965

இங்ஙனம்,
ஸ்ரீராமகதாரத்ன V. தியாகராஜன்

உ

வெற்றிவேலுற்ற துணே

# ஸ்ரீ மீனுட்சி கல்யாணம்

## தமிழ்த்தாய் வாழ்த்து.

*பொருப்பிலே பிறந்து தென்னன்புகழிலே கிடந்து சங்கத்து*
*இருப்பிலே இருந்து வைகை ஏட்டிலே தவழ்ந்த பேதை*
*நெருப்பிலே நின்று கற்ரேர் நினேவிலே நடந்தோரேன*
*மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளருகின்ருள்.*

அமிழ்தினுமினிய நம் செந்தமிழின் பெருமையையும், தெய்வீகத் தன்மையையும் எவராலும் அளவிட்டுக் கூறமுடியாது. என்றும் இளமை குன்ருது அழகுடன் இலங்கும் மொழி தமிழ் மொழி. ''முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான் முருகன்'' எனக் கூறுகிறது கந்தரலங்காரம். தமிழில் இனிமையிருக்குமே தவிர, கடுமையே கிடையாது. தமிழில் வைய ஆரம்பித்தால் கூட இனிமையான சொல்தான் வருமென்பது அதன் பொருள். தமிழிலக்கியத்தில் உள்ள அனேக நூல்களுக்கு இறைவனே முதலடியெடுத்துக் கொடுத்தான் என்பர் பெரியோர். ''உலகெலாம்'' என்று திருத்தொண்டர் புராணத்திற்கு முதலடி எடுத்துக் கொடுத்தான் என்பர். மதுரையின் பெருமை கூறும் திருவிளேயாடற் புராணத்தைப் பாடியருளிய பரஞ்சோதி மாமுனிவர் திருமறைக் காடு என்னும் வேதாரண்யத்தைச் சேர்ந்தவர். அவர் ஒரு சமயம் மதுரைக்கு வந்திருந்தபோது, மீனுட்சி அம்மையின் சன்னிதியில் திருவிளேயாடற் புராணத்தைப் பாடும்படி உத்திரவு கிடைக்க, அம்மையின் திருப்பெயரான ''சத்தி'' யாய் என்ற மங்கல மொழியில் தொடங்கி 3363 பாடல்களில் அறுபத்து நான்கு திருவிளேயாடல் களேயும் பாடி முடித்தனர் என்பர். அரும்பெரும் புலவரும்,

உத்தம சக்தியுபாசகருமாகிய பரஞ்சோதி மாமுனிவர் தமிழின் பெருமையைப் பாடுகின்றார். ''சத்தியாய்'' என்ற வார்த்தையை அம்மையே எடுத்துக் கொடுத்தாள் எனக் கூறுவர். சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலி நாச்சியாரைத் திருவொற்றியூரில் திருமணம் செய்து கொண்டதாகக் கேள்விப்பட்ட அவருடைய முதல் மனைவி யான பரவை நாச்சியார், தனது இல்லத்திற்கு மீண்டும் அவர் வந்தால் உயிர் விடுவேன் என்று கூறிப் பிணங்க, இதையறிந்த சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூர் இறைவனிடம் வேண்ட, தன் அருமை பக்தனாகிய நாயனாருக்காக நள்ளிரவில் கால் தரை தோய இருமுறைகள் இறைவன் பரவை நாச்சியாரிடம் தூது போய் அவரை மாற்றி இசையும்படி செய்தார். இவ்வரலாற்றை, கரு ணைக்கு அருணகிரியான பெரியார் தமது திருப்புகழில்

பரவை மனை மீதிலன்று ஒரு பொழுது தூது சென்ற
பரமனருளால் வளர்ந்த — குமரேசா.

எனக் குறிப்பிட்டு அனுபவிக்கிறார். இறைவன் தூது சென்றது தன் அருமை பக்தனான சுந்தரமூர்த்தி நாயனாரின் தமிழ் மீதுள்ள ஆசையால் தானே!

∴ ∴ ∴

அதே சுந்தரமூர்த்தி நாயனாரின் தமிழுக்கு ஆசைப்பட்ட இறைவன் கொங்கு நாட்டிலுள்ள அவினாசி என்னும் தலத்தில் என்றைக்கோ குளத்திலிருந்த முதலையால் விழுங்கப்பட்ட ஒரு சிறுவனைப் பதிகம்பாடி எழுப்பி விட்டார்.

தொண்டை நாட்டில் திருமயிலை என்னும் தலத்தில் ஒரு பெண் மலர் கொய்யும் காலத்தில் விஷம் தீண்டி இறக்க, அவ் வுடலைத் தகனம் செய்து சாம்பலைப் பாதுகாத்து வைத்திருக்க, ஞானசம்பந்தஸ்வாமிகள் அவ்விஷயமறிந்து, அச்சிறுமியின் பெரி யோர்கள் மூலம் அந்தச் சாம்பலைக் கொண்டுவரச் சொல்லிப் பதிகம் பாடி உயிர் கொடுத்தனர்.

வேதங்களால் பூசிக்கப்பட்டு மூடப் பெற்றிருந்த வேதாரண்யத் திருக்கோயில் கதவத்தை ஞானசம்பந்தரும் அப்பர் சுவாமிகளும் அத்தலஞ் சென்றிருந்தபோது சம்பந்தப் பெருமானின் வேண்டு கோளுக்கு இணங்கி அப்பர் சுவாமிகள் பதிகம்பாடித் திறப்பித் தனர். இத்துணைப் பெருமையும் தமிழ் மொழியினுடையது தானே? வேறு எந்த மொழி இவைகளைச் செய்த பெருமையுடை யது எனக் கேட்கிறார் பரஞ்சோதி.

*தொண்டர் நாதனை தூதிடை விடுத்தது முதலை*
*யுண்ட பாலனை யழைத்ததுமெலும்பு பெண்ணுருவாக்*
*கண்டதும் மறைக்க தவினைத் திறந்ததும் கன்னித்*
*தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களோ புகல்வீர்*

அப்படிப்பட்ட தெய்வீகத் தமிழ் விளங்கி வழங்கும் மூவேந்தர் நாட்டிலே பாண்டிய தேசம் சிறப்புடையது. வேறு எத்தலத்தி லும் இறைவன் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்ய வில்லை. பார்வதிதேவி (மீனாட்சி என்ற பெயருடனும்) சிவபெரு மான் (சோமசுந்தர பாண்டியன் என்ற பெயரிலும்) முருகப் பெரு மான் (உக்கிர குமாரபாண்டியன் என்ற பெயரிலும்) அரசு செலுத் திய பெரும் பேறு பெற்றது. பாண்டிய தேசத்து மக்களின் பெருமையைக் கூறும் பரஞ்சோதி மாமுனிவர், அந்நாட்டு மக் களின் ஒழுக்கத்தைப் பற்றி, என்ன பஞ்சம்வந்து நாடு வரண் டாலும், ஆட்சி செய்பவர் எப்படி நடுநிலை தவறினாலும், வறுமை பிடித்து வருத்தினாலும் சிவநெறி தவறாது வாழ்வார். அந் நிலையிலும் தம்மை விற்றாவது சிவதருமங்களைச் செய்யக்கூடிய உத்தமர் அந்நாட்டினர் எனக் குறிப்பிடுகிறார்.

சிவபக்தனாகிய இராவணனது நாட்டிலேயிருந்த செடி கொடி மரங்கள் தங்கத்தாலும் வெள்ளியினாலும் செய்யப்பட்டவை' தங்க மயமான மரஞ்செடி கொடிகளில் பூப்பூத்து, தேன்உண்டாகி, காய் காய்த்து கனியும் கிடைத்தனவாம். ஆனால் இராவணன் தருமம் தவறியவன். தருமம் தவறாது சிவநேசச் செல்வர்களாக விளங்கிய மதுரை மக்களில், அந்நகரத்து வணிகர் வீட்டுக் கடைசிப்

பின்புறக் கதவுகள் தங்கத்தினுல் செய்யப்பட்டு வயிரத்தாளிடப் பட்டிருந்தன என்.ருல் அத்தேசத்தின் செல்வ நிலேயை எப்படிக் கூறுவது?

*செயிரிற்றீர்ந்த செம்பொன்னினுல் திண்ணிலேக் கதவம்*
*வயிரத் தாழுடைத் தவர் கடைவாயிலு மென்ருல்*
*அயிரிற்றீர்ந்த பேரறிஞரும் அனேயர் தஞ்செல்வத்து*
*இயலிற்ருமென வரையறுத் திசைப்பது எவனே.*

மதுரையின் தெருக்கள் யாவும் புண்ணியம் செய்தவை. பரம கருணுநிதியான சிவபெருமான் தனது அடியாருக்கு அருள் செய் வதற்காக மாணிக்க வியாபாரியாகவும், வளேயற்காரனுகவும், விறகுத் தலேயனுகவும் தனது கால் தரை தோய மதுரைத்தெரு வில் நடந்துவர அப்பெருமானுடைய திருவடிகள் தீண்டுவதற்குப் புண்ணியம் செய்த தெருக்கள் மதுரையின் தெருக்கள். இறைவ னுடைய தொடர்பு இல்லாத எதுவுமே தனக்கு வேண்டாமென்பர் பெரியோர்.

*அம்மா! நின் திருக்கோயில் இல்லாத நாட்டினில் நான் அமர*
*[வேண்டா!*
*எம்மோய்! உன் மெய்ம்மையினே உணர்த்தாத கலேயேதும்*
*[எனக்கு வேண்டா!*
*விம்மார்வத்தால் உனது தாள் பரவாக்கிளேயேதும் எனக்கு*
*[வாய்க்க வேண்டா!*
*இம்மாயவுலகிலுனே வழுத்தாத நாளொன்றும் எனக்கு ஈய*
*[வேண்டா!*

—ஆனந்த சாகரஸ்தவம்—ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்.

[தமிழாக்கம் கோவை கவியரசு ஸ்ரீ நடேசக் கவுண்டர்'

அந்த முறையில் இறைவனது திருப்பாதம் பட்டத் தெருக்களேக் கூறுகிருர் பரஞ்சோதி.

*ஐயவென்னுரை வரம்பின வாகுமோ அடியர்*
*உய்யமாமணி வரிவளை விறகு விற்றுழன்றேன்*
*பொய்யில் வேதமும் சுமந்திடப் பொரு தகன்றரற்றுஞ்*
*செய்ய தாள் மலர் சுமந்திடத் தவஞ் செய்த தெருக்கள்.*

இறைவன், இறைவியான உமாதேவி, முருகப்பெருமான் மூவராலும் அரசாட்சி செய்யப்பட்ட அந்நகரத்தில் வசித்தால் மற்ற ஊர்களில் செய்த கொலை, களவு, முதலானவை செய்த பாபங்கள் நீங்கி விடும். ஒரு சமயம் பிரமதேவர் தராசின் ஒரு தட்டில் கைலை முதலான சகலத்தலங்களையும் வைத்து, மதுரையை ஒரு தட்டில் வைக்க, மற்ற தலங்களிருந்த தட்டு உயர்ந்து, கனத்தினுல் மதுரையிருந்த தட்டுத் தாழ்ந்தது என்றுல் மதுரையின் பெருமையை என்னென்பது!

*கைத்தல நான் கிரண்டுடைய மலர்க் கடவுள்*
*மேலொரு நாள் கயிலையாதி*
*எத்தலமும் ஒரு துலையிட்டு இத்தலமும் ஒரு*
*துலையிட்டிரண்டும் தூக்க*
*உத்தமமாம் திருவாலவாய் மிகவும் கனத்தது*
*கண்டு உலகின் மேலா*
*வைத்த தலமிது வென்றுல் இதன் பெருமை*
*யாரே வழுத்தற் பாலார்?*

இத்தலத்தில் எழுந்தருளி அடியார்க்கு அருள் சுரந்து விளங்கும் இறைவனுன சோமசுந்தரப் பெருமான், இடைக்காடன் என்ற புலவன் வருந்த, அவனுடைய வருத்தத்தை நீக்குவதற்காகத் தன் ஆலயத்தை விட்டு ஊருக்கு வெளியே நடந்து சென்ற திருவடிகளையுடையவன். பாண்டியன் ஒருவன் ''எத்தனை நாள் இடது காலைத் தூக்கிக் கொண்டு வலது காலையூன்றி நிற்பது? தயவு செய்து கால் மாறியாட வேண்டும்'' எனக்கரைந்து வேண்டி வணங்கியதற்கு இணங்கி மாறியாடிய திருத்தொடைகளையுடையவன். தன் அன்பனுன ஒரு வாள் வித்தைக்காரனுக்காக, அவனுடைய சீடனைத் தண்டிக்கும் பொருட்டு போருக்குச் சென்ற

காலத்தில் வாளெடுத்தும் கச்சுக் கட்டியும் சென்ற இடையுடைய வன். அன்பின் உருவான வ ந் தி எனும் கிழவி கொடுத்த பி ட் டை வாங்கிச் சாப்பிட்ட வயிறுடையவன். பன்றிக்குட்டி களுக்குப் பால் கொடுத்த மார்புடையவன். மாணிக்க வியாபாரி யாக மதுரையிலே வந்து ரத்தினங்களை அள்ளிக் காட்டிய கைகளை யுடையவன். மதுரையம்பதி பாண்டியர் வம்சத்திலே அரசனாகத் திகழ்ந்த காலத்து வேப்பமாலையணிந்த கழுத்தையுடையவன். கரிக்குருவிக்கு உபதேசம் செய்த வாயுடையவன். உத்தமக்கவி களின் தமிழையருந்திய திருச்செவிகளையுடையன். நாதியற்ற ஒரு பெண்ணுக்கு உதவி செய்வதற்காக அவளுடைய சகோதரன் உருவில் அரசவையில் தோன்றி "மருமகனே!" என்று அலறி அப்பெண்ணின் மகனை வாரியெடுத்துக் கண்ணீருகுத்த கண்களை யுடையவன். பிட்டுக்காக ம ண் சுமந்த திருமுடியுடையவன். அப்பெருமான் உலகமெங்கும் பரந்து விளங்கும் பெருமையை யுடையவன் என்பதற்கு அடையாளம் அப்பெருமானின் திரு வுடம்பில் பாண்டியன் அடித்தபோது உலகத்திலுள்ள எல்லோ ருடைய முதுகிலும் அவ்வடிபட்டது என்பதே.

*திறப்படும் உலகமெங்கும் வியாபியாய்ச் சிறந்து நிற்கும்*
*அறப்பெருங்கடவுள் சோமசுந்தரன் அதனாலன்றோ*
*கறைக்கதிர் வடிவேல் தென்னன் கையிற் பொற் பிரம்புபட்ட*
*புறத்தடித் தழும்பு மூன்று புவனமும் பட்டதன்றோ.*

இப்படிப்பட்ட மூர்த்தி, தீர்த்தம் தலமாகிய மூன்று பெருமை களும் பொருந்திய மதுரையை ஒரு காலத்தில் மலையத்துவசன் எனும் பாண்டியன் அரசாட்சி செய்து வந்தான். அவனுக்கு அனேக மனைவியர். சூரிய குலத்தில் உள்ள சூரசேனன் மகளான காஞ்சனமாலை என்பவளைப் பட்டமகிஷியாகக் கொண்டு நாட்டை அரசாளுகிறான். தினமும் மூன்று வேளைகளிலும் தவறாது சிவ பூஜை செய்யும் அவனுக்கு மக்களில்லையே என்ற மனவருத்த முள்ளது.

*கல்லாமழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்*
*சொல்லாலுருக்கி அழுது ஓடித் தொடர்ந்து பற்றி*
*மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்*
*இல்லாதவர் மணவாழ்க்கையின் இனிமை என்னாம்.* (பாரதம்

மகவில்லையே என மனம் வருந்திய அரசன் அசுவமேதயாகம் செய்யலானான். அசுவமேதம் பாவங்களைப் போக்கக்கூடியது. நூறு அசுவமேதயாகங்களை ஒருவன் செய்தானென்றால் தேவேந்திரபதவி கிட்டும். மலையத்துவஜ பாண்டியன் ஒன்றன் பின்னொன்றாக 99 அசுவமேதயாகங்களைச் செய்து விட்டதையறிந்து தேவேந்திரன் அவனெதிரில் தோன்றி ''புத்திரப்பேறு விரும்பும் நீ புத்திரகாமேட்டி யாகம் புரிந்தால் உனது எண்ணம் நிறைவேறும். ஆதலால் அசுவமேத யாகத்தை நிறுத்திவிடு'' எனக் கூற அவ்வாறே பாண்டியன் அசுவமேதத்தை நிறுத்தி புத்திரகாமேட்டி யாகத்திற்கு தனது நியமத்திற்குரிய மனைவியுடன் யாக சாலையடைகிறான்.

*மிக்க மகவேள்வி செய் விருப்புடையனாகி*
*அக்கணம் அதற்குரிய யாவையும் அமைத்துத்*
*தக்க நியமத்துரிய தேவியொடு சாலை*
*புக்கனிருந்து மகவேள்வி புரிகிற்பான்,*

ஒருவனுக்கு எத்தனை மனைவியரிருப்பினும் நற்காரியங்களுக்குக் கூட இருந்து உதவி செய்ய முதல் மனைவிக்கே உரிமையுண்டு அவளையே ''தருமபத்தினி'' என ஆன்றோர் கூறுவர். எந்த மங்கள காரியத்தையாரம்பித்த போதிலும் இந்த என் தரும பத்தினியுடன் இக்காரியத்தைச் செய்வேனாகவும் என மந்திரம் கூறுவர்.

யாகம் நடைபெறுகிறது. இதன் காரணமாக உலகத்தில் பல மாறுதல்களேற்படுகின்றன. கைலாயபதியான பரமேசுவரன் பக்கலிலிருந்த பார்வதிதேவியைக் காணோம். பார்வதிதேவியை வளர்த்த அன்னையான மேனாதேவி ''நமக்குக் கிடைத்த பாக்கியம் வேறு எவருக்கோ கிடைக்கப் போகிறது போலிருக்கிறதே'' என நாணமடைகிறாள். மலையத்துவஜ பாண்டியனின் வலது தோளும் காஞ்சனாதேவியின் இடது தோளும் துடிக்கின்றன. ஏழுலகங்களும் களிப்படைகின்றன. சைவம் தழைக்கவும், தருமம் வாழவும், அதருமம் அழியப் போகின்றது எனவும் சுபசகுனங்கள்

தோன்றுகின்றன, பதினெட்டு பாஷைகள் பேசும் உலகத்தில் தமிழ் பேசும் பிரதேசம் சிறப்படையவும், அந்தந் தமிழ்த் தேசத்தின் அரசர்களில் பாண்டியர்வம்சம் பெருமையடையவும் வேள்வித் தீயிலிருந்து தோன்றுகிறது ஒரு திருவுருவம். புன்னகை புரிந்து கொண்டு மழலைபேசிக் கொண்டு கழுத்தில் அழகிய ஒரு முத்து மாலையுடன் தோன்றுகிருள் உலக நாயகி. மூன்று வயதுக் குழந்தையாகத் தோன்றிய அம்மை இயற்கைக்கு விரோதமாக மூன்று மார்புகளுடன் தோன்றுகிருள்.

*தெள்ளமுத மென்மழலை சிந்த இளமூரல்*
*முள்ளெயிறரும்ப் முலை மூன்றுடைய தோர் பெண்*
*பிள்ளையென மூவொரு பிராய மொடு நின்ருள்*
*எள்ளரிய பல்லுயிரு மெவ்வுலகு மீன்ருள்.*

உலகத்தில் நாம் பிறக்கிருேம். பிறக்கும்போது அன்னைக்கு அளவிடமுடியாத துன்பம். பிறக்கும் நமக்கும் பிறக்கும் போதே துன்பம். அதனுல் மறுபடியும் அன்னை வயிற்றில் பிறவாமற் காக்க வேண்டும் எனப் பெரியோர்கள் இறைவனை வேண்டுவதுண்டு.

*மாதாவுடல் சலித்தாள் வல்வினையேன் கால் சலித்தேன்*
*வேதாவும் கைசலித்து விட்டானே — நாதா*
*இருப்பையூர் வாழ்சிவனே! இன்னுமோர் அன்னை*
*கருப்பையூர் வாராமற்கா,*

உலகமாதா வேள்வித் தீயினின்று தோன்றுகிருள். அன்னையான காஞ்சனமாலைக்கு எவ்விதமான துன்பமும் இல்லை. தாய்க்கு வருத்தமேற்படாமல் தோன்றுகிருள் உலக மாதா. சிவபரமாகவோ, விஷ்ணு பரமாகவோ, எந்த தேவியும் அவதரித்தாள் எனக் கூறும்போது, அன்னையின் திருவயிற்றிலிருந்து பிறந்தாள் என்பதே இடையாது. சிதா பிராட்டி யாகசாலையைப் பொற்கலப்பை கொண்டு உழும்போது நுகத்தடியின் முனையில் தோன்றினுள். அம்மை பார்வதி தேவி ஒரு அழகிய ஓடையின் கரையில் கிடக்கப் பர்வதராஜன் கண்டெடுத்தான். தேனையும் தமிழையும் குழைத்துப் பாடல்களைப் பாடிய ஆண்டாள் ஒரு துளசி வனத்தில் பெரி

யாழ்வாரால் கண்டெடுக்கப்பட்டாள். உலகத்தைப் பெற்றெடுக்கும் உலகமாதாவை எந்த வயிறும் தாங்காது என்பது குறிப்பு.

பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி இப்பேர்ப்பட்ட ஐந்து சக்திகளாக உலகத்தைப் படைத்து, காத்து, அழித்து, மறைத்து, அனுக்ரகிக்கிறுள் அம்மை. இப்பேர்ப்பட்ட அம்மையை மகளாக அடைவதற்குப் பாண்டிய மகாராசன் என்ன புண்ணியம் செய்தானே!

*பரையாதி விருப்பறிவுத்தொழிலாகி உலகமெலாம் படைத்துக்*
*[காத்து*
*வரையாது துடைத்து மறைத்து அருளிஅவை நின்றுந்தன்*
*[வடிவு வேருய்*
*உரையாதி மறைகடந்த ஒரு முதல்வி திருமகளாயுதித்தற்*
*[கிந்தத்*
*தரையாளு மன்னவன்செய் தவமிதுவோ அதற்குரிய*
*[தவந்தான் மன்னே*

உலகில் எது நடந்தாலும் அம்மையின் செயல் என்கிருர் நீலகண்ட தீக்ஷிதரவர்கள். உலகத்தில் எது செய்தாலும், தவறிழைப்பதுகூட யாவும் உன் செயலாக இருக்க, குற்றம் செய்தேன் என என்னை எவ்வாறு கூறுவது? அதற்கும் தாயே! நீ கொடுத்த சக்திதானே. நன்ருகச் சாப்பிடு என்று உணவூட்டிய தாய் குழந்தையைப் பார்த்து ''ஏன் நிறையச் சாப்பிட்டாய்?'' என்று கண்டித்தமாதிரி யல்லவா இருக்கிறது இக்காரியம்'' எனக் கேட்கிருர்.

*காண்பதும் உயிர்ப்பதுவும் எதுவும் உந்தன் செயலாகக்*
*[கருதா நின்றேன்*
*பூண்பதினி எத்தவத்தை என்னுடையது எனத்தாயே!*
*புசிப்பாயென்ன*
*ஊண்பறிந்துண்பாயென்ன தாய்கொடுத்துண்ட குழந்தை*
*[மீதூண் குற்றம்*

*காண்பவர் யார்? கடம்பவனப் பவனமமர் கயற்கணுளே*

2 கள்ளமில்லாத வெள்ளையுள்ளம் படைத்தவர்களிடம் ஆனந்த

வெள்ளமாக விளங்கும், அன்பே உருவமான அம்மையே தனக்கு ஒரு மகளாக வந்துள்ள கருணையையும் தன் மனைவியான காஞ் சனமாலையின் நல்வினைப்பயன் இது என்பதையுமறியாத பாண் டியன் கவலைப் படுகிறான்.

இன்றும் உலகில் பெண் குழந்தை பிறந்துவிட்டால் சிலர் அனுவசியமாகக் கவலைப் படுகின்றனர். பெண் சக்தியின் உருவம். உலகில் எதைக் கண்டாலும் பெரியோர்கள் பெண்ணுருவமென்று வணங்குவார்கள் தண்ணீரை கங்கை, பூமியை பூமாதேவி, ஆகாயத்தை ஆகாயவாணி, பொருளை இலட்சுமிதேவி, கல்வியைச் சரசுவதி என்றெல்லாம் வணங்குவர். ஆனால் பெண் பிறந்தால் கவலையும் வெறுப்பும் கோபமும் அடையும் அன்பர்களின் அறி யாமைதான் என்னே! ஆண் மகன் பிறந்தால் களிப்படைகின்ற னர். பெண் பிறந்தால் சிலவு எனக்கூடப் பயப்படுகின்றனர். ஆனால் ஆணைக்காட்டிலும் பெண்ணுக்கு நன்றியறிவு அதிகம் என்பதை மறந்து விடுகின்றனர். மனைவி வந்தவுடன் மாதாபிதாக் களை மறக்கும் மாபுருடர்களை எம் அனுபவத்தில் கண்டிருக்கிறோம். மணாளன் வந்தபோது தன் மாதாபிதாக்களுக்குத் தன்னால் இயன்ற உதவி செய்து அவரை மனங்குளிர வைக்கும் மங்கை நல்லாரையும் கண்டிருக்கிறோம். மக்களிடம் பேதம் காணும் மாதாபிதாக்களை என்னென்று கூறுவது? பருவதராசனிடம் சக்தி தேவி மகளாகப் பிறந்ததுபற்றி மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் "தாயே! உலகில் ஆண்மகவு பிறப்பதுதான் சிறப்பு. பெண் ஒரு சிறப்பல்ல. பெண் பிறந்தால் துன்பம் வந்த மாதிரி என்றும், எவராவது திருமணம் செய்துகொண்டு வணங்கினால் அந்த மணமக்களுக்கு நல்ல ஆண் குழந்தை பிறக்க வேண்டுமென்று ஆசி கூறும் சிலருக்கு மனம் வெட்கும்படியாக பருவத ராசனுக்கு மகளாகப் பிறந்தாயே" எனத் தன்னுடைய நூல் ஒன்றில் பாடுகிறார்கள்.

*பேசுபுகழ் சால் பெரும்புவனத்தில் ஆண்மகப் பெறல் சிறப்பு*
*[என்றும்*
*மற்றைப் பெண்மகப்பெறல் அத்துணை சிறப்பன்று:துயர்*
*[பெற்ற தொப்பாகு மென்றும்*

மாசுபடு துன்பமே பெண்ணுருவாயாயெந்த வைப்பினும்
[வருவெதன்றும்
மதிக்கின் ஒரு மகவு மகவா? என்று இங்ஙனம் வகுத்
[துறைப்பார்களொடு
கூசுதலிலாவது அகமலர்ந்து ஆண்மகப் பெறுதி குறைவுதப
[என்று ஆசி
முற்கூறுநரும் உள்ளம் நாண்கொள்ள வெள்ளப்படாக்கு
[வடுவோனணவ ஓங்கும்
தேசு மதி பனிமலைக்கொரு புதல்வியாய உமைசெங்கீரை
[யாடியருளே!
திருப்பெரு மணத்தமர் அருட்பெருமணச் செல்வி செங்
கீரையாடியருளே.

—திருவெண்ணீற்றுமை பிள்ளைத் தமிழ்.

''மக்களில்லையே என மனம் வருந்தித் தவம்செய்தேன். ஒரு ஆண் குழந்தை கிடைக்குமென இந்த வேள்வி செய்தேன். அதுவும் பெண் மகவையளித்துள்ளது. ஐயோ! அப்படிப் பிறந்த குழந்தையும் இயற்கைக்கு விரோதமாக மூன்று மார்புகளுடன் தோன்றி உற்றோரும் உலகோரும் பரிகசிக்கும்படி நேர்ந்திருக்கின்றதே'' என்று கவலையடைந்திருக்கும் காலத்தில், ''மன்னவ! உன் திருமகளுக்கு ஆண் மகன் மாதிரி வேண்டிய சடங்குகளைச் செய்து இந்நாட்டு அரசியாக முடிசூட்டு. அவள் கணவன் வரும்போது அவளுக்கு அதிகமான உறுப்பு மறையும். கவலைப்படாதே'' என்று இறைவனருளால் ஒரு வாக்கு அசரீரியாகக் கூறுகிறது

மன்னவ! நின் திருமகட்கு மைந்தர்போல் சடங்கனைத்தும்
[வழாது வேதம்
சொன்ன முறைசெய்து : பெயர் தடாதகை என்றிட்டு முடி
[சூட்டுவாய் இப்
பொன்னனையாள் தனக்கு இறைவன் வரும்பொழுது ஒரு
[முலை மறையும் புந்தி மாழ்கேல்
என்ன அரனருளாலோர் திருவாக்கு விசும்பிடை நின்றெழுந்
[ததன்றே.

இது கேட்ட மன்னவன் மகிழ்ச்சியடைந்து "சிறையிலிருக்கும் கைதிகளை விடுதலை செய்யுங்கள். ஏழு வருஷம் வரி இடையா தென்று அறிவியுங்கள். கோயில்களுக்கும் சத்திரங்களுக்கும் மேலும் வேண்டியவற்றைச் செய்யுங்கள். சிற்றரசர்களை எல்லாம் விடுதலை செய்யுங்கள். ஊரெங்கும் விழாக் கொண்டாடச் சொல்லுங்கள்" என்றெல்லாம் கட்டளையிடுகிறான்.

அம்மை பராசக்தி அருமையாக வளருகிறாள். குழந்தை விளையாடுகிறாள். கருணாமூர்த்தியான முருகன் கூட வாய்வைத்து அருந்தாத மார்பில் பொம்மைகளுக்குப் பால் கொடுப்பதாக விளையாடினாள்.

உலகத்தில் மிகமிக உயர்ந்த இன்பம் குழந்தைகளை வளர்ப்பதனால் ஏற்படும் இன்பம். வீரபாண்டியப் புலவர் என்னும் பெரியார் தூத்துக்குடியிலிருக்கும் பாகம் பிரியாள் என்ற அம்மையின் மீது பிள்ளைத்தமிழ் பாடுங்காலத்தில் ஐம்புலன்களுக்கும் இன்பம் அளிக்கும் தாயல்லவா நீ என்று தாலாட்டுப்பாடுகிறார். "அம்மா! உன் மழலைச் சொல்லைக் கேட்பது **காதிற்கு** இன்பம். உன்னை முத்தமிடுவது **வாய்க்கு** இன்பம். உன்னைத்தீண்டி மடிமேல் வைத்திருப்பது **உடலுக்கு** இன்பம். உன்னை உச்சி மோவது மூக்கிற்கு இன்பம். உன்னைக்காண்பது **கண்ணிற்கு** இன்பம்" என்று குறிப்பிடுகிறார்.

*காதுக்கினிதுன் மழலை அஞ்சொல்*
*கண்ணுக்கினிதுன் காட்சி யின்பம்:*
*கனிவாய்க் கினிதாய்க் கவுண் நெரித்து*
*கன்னந் தனை முத்துவதின்பம்*
*வேதச் சொரூபி உன்னை மடி*
*மேல் வைத்திருப்பது டற் கின்பம்*
*மெச்சியுனது உச்சியை மோந்து*
*வியத்தனுசிக் கினி தின்பம்*
*பேதைக்கினி ஐம்பொறிக் கின்பம்*
*பிள்ளைக்கனியன் றியுமுண்டோ*
*பெரிய இமையக்கிரியருள் பெண்*
*பிள்ளாய்! குதலை விள்ளாயோ?*

சீதக்காயம் பூவருணச் செல்வி! தாலோ! தாலேலோ!
சிவனேர் பாகம் பிரியாத
செல்வீ! தாலோ! தாலேலோ.

இவ்வாறெல்லாம் தாலாட்டப் பெறுகிருள் அம்மை. உத்தம மீனுட்சி உபாசகராகிய குமரகுருபர சுவாமிகள்.

உருகி உருகி நெக்கு நெக்குள்
உடைந்து கசிந்திட்டு அசும்பூறும்
உழுவலன்பிற் பழவடியார்
உள்ளத் தடத்தில் ஊற்றெடுத்துப்
பெருகுப ரமானந்த வெள்ளப்
பெருக்கே! சிறியேம் பெற்ற பெரும்
பேறே! ஊறு நறைக் கூந்தல்
பிடியே! கொடிநுண் நுசுப்பு ஒசிய
வருங்குங்குமக் குன் றிரண்டேந்தும்
மலர்ப்பூங் கொம்பே! தீங்குழலின்
மதுரங்கனிந்த பசுங் குதலை
மழலையரும்பச் சேதாம்பல்
முருகு விரியுஞ் செங்கனிவாய்
முத்தந்தருக முத்தமே!
முக்கட் சுடர்க்கு விருந்திடூம்
முலையாய் முத்தந்த ருகவே!

என்று முத்தப் பருவம் பாடி அம்மையின் கருணையை வியந்து உருகுகிருர். அம்மை அம்புலியழைத்து விளையாடுகிருள்.

" சந்திரனே! நீ தினம் தினம் தேயக்கூடிய குறையை அம்மை சிந்திக்கவேயில்லை! இருபத்தேழு மனைவியரிருந்தும் யாவரிடமும் ஒரே மாதிரி நீ அன்பு காட்டாத குணத்தையும் எண்ணவில்லை! தன் மகனுன விநாயகனை ஒரு நாள் கேலி செய் தாயென்று எண்ணவுமில்லை! தனது மாற்ருளாகிய கங்காதேவி யுடன் இறைவன் திருமுடியில் விளங்குகிருய் என உன் மீது கோபிக்கவில்லை. நீ முன்னுள் ஏதோ தவஞ்செய்திருக்கிருய்

போலும்! அம்மை உன்னை ஆட அழைக்கிறாள்! வா'' என்று வயிரவன் கோயில் வடிவுடை அம்மைபிள்ளைத்தமிழ் ஆசிரியர் பாடுகிறார்.

*குழகுபடு நின்மேனி நாடொறுந் தேய்வுறும்*
*குறையையும் சிந்தித்திலாள்!*
*கொண்ட மனையாட்டியரை ஒப்பநோக்காததீக்*
*குணத்தையும் மனத்தி லெண்ணாள்!*
*மழகளிற் றனைத் தன் சேயையொரு ஞான்று*
*மதியின்றி எள்ளி அந்தோ!*
*மன்பதைகள் காணுதற்கு ஒண்ணாப்பு லைத்தன்மை*
*வாய்த்த நின் புன்மையுன்னாள்!*
*பழகியரன் முடியிற் றன் மாற்றவளினோடு தவழ்*
*பான்மையைச் சிறிதும் நினையாள்!*
*பண்டு நீ பெரு நோன்பு உஞற்றியுளை போலும்*
*பரிந்துனை விரைந் தழைத்தாள்!*
*அழகு நிறைவைரவன் கோயில் வளர் அம்மையுடன்*
*அம்புலீயாட வாவே!*
*அடியரிடர் பொடிசெயடல் வடிவுடைய பிடியினுடன்*
*அம்புலியாட வாவே!*

அவ்வாறு அருமையாக வளர்ந்த அம்மை மீனாட்சிக்குப்பாண்டிய தேச அரசையளித்து, முடிசூட்டி, வானாடு பெறுகிறான் மலையத்துவஜன். காலையிலெழுந்து நீராடிச் சிவபூசை முடித்து சிவபெருமானுடைய திருக்கோயிலையடைந்து வணங்குகிறாள். பின் சபைக்கு வருகிறாள். அனேகதேயத்து அரசர்களுக்குப் பேட்டியளிக்கிறாள். வேதியர்கள் ஒழுக்கங்குன்றாது நடக்கின்றனரா, கோயில்களில் பூஜைகள் செவ்வையாக நடக்கின்றனவா எனக்கண்டும், மற்றும் தன் குடிமக்களுடைய நலன்களை நேரிலும், ஒற்றர் மூலமும் அறிந்து ஆவன செய்கிறாள். கற்றறிந்து வந்துள்ள புலவர்களின் கவிதைகளைக் கேட்டு மகிழ்கிறாள். செல்வம், கல்வி இரண்டையும் தன் கண்களாகப் போற்றுகிறாள். இவ்வாறு தடாதகைப் பிராட்டி கன்னிப் பருவத்தில் பாண்டிய தேசத்தை அரசாட்சி செய்ததால் அத்தேசத்திற்குக் கன்னிநாடு எனப்பெயர் வந்தது என்பர்.

*வரைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி*
*விரைசெய் தார்முடி வேய்ந்து தண்குடை மனுவேந்தன்*
*கரைசெய் நூல்வழி கோல் செலக் கன்னியாம்பருவத்து*
*அரசு செய்தலாற் கன்னிநாடாய தந்நாடு*

∴ ∴ ∴

இவ்வாறு மீனாட்சியம்மையார் அவதரித்த பெருமையை அகத்தியர் முனிவர்களுக்குக்கூற ''பாண்டியன் மகளாகப் பராசக்தி வருவதற்குக் காரணம் என்ன?'' என்று அவர்கள் கேட்க, அகத்தியர் பதில் கூறுகிறார். விச்சுவாசு என்று ஒரு கந்தர்வனிருந்தான். அவனுடைய மகள் இச்சாவதி என்ற பெயருடையவள். அக்கிளிமொழியாள் ஒருநாள் தந்தையை வணங்கி ''அம்பிகையை வழிபட்டுப் பெருமையை அடைய வழிவேண்டும்!'' என்று கூற, அவன் தன் மகளுக்கு அம்பிகையின் மந்திரத்தையுபதேசிக்க அவள் மதுரைக்குச் சென்றாள். அங்கு தினமும் பொற்றாமரையில் குளித்து, அம்மையை தியானித்திருக்கும் நாளில் ஒரு நாள் அம்மை மீனாட்சிதேவி மூன்று வயதுப் பெண் குழந்தையாக வந்து தாயே! உனக்கு என்ன வேண்டுமென்று கேட்க, அம்மா உன் திருவடியில் என்றும் நீங்காத அன்பு வேண்டுமென்று அந்தப்பெண் கேட்க, மூன்று வயதுக் குழந்தையாக வந்த அம்மை, உனக்கு இன்னும் வேண்டுவதென்ன எனக்கேட்க ''இக்குழந்தையுருவத்தில் என்னிடம் வந்து இருந்து கருணைபாலிக்க வேண்டும்'' என இச்சாவதி கேட்டாள். இதற்கு இணங்கிய அம்மை, ''மதுரையம்பதியை மலையத்துவஜன் என்னும் பாண்டிய மன்னன் ஆளப்போகிறான், அவனுடைய மனைவியாக நீ வருவாய். அப்போது உன்னுடைய இந்த ஆசை நிறைவேறும்'' எனக் கூறினாள்.

''இச்சாவதி காஞ்சனமாலையாக வர, அம்மையார் மூன்று வயதுக் குழந்தையாக அவளிடமே தோன்றினார்'' என்று அகத்தியர் கூறி முடித்து மேலே கதை சொல்லலானார்.

∴ ∴ ∴

இவ்வாறு அரசாட்சி செய்திருந்த நாளில் கல்யாணப் பருவம் அடைகிறாள். "அம்மணி! உனக்கு இன்னும் திருமணமாகவில்லையே!" என்று அன்னை காஞ்சனாதேவி கவலையுடன் கூற "அம்மா! உன் மனோபீஷ்டம் நல்லகாலம் வந்ததும் நிறைவேறும் கவலையடையாதே" என்று கூறி, தாய் வேறு பதில் கூறுவதற்கு முன் "நீ இங்கேயே இரு! நான் திக்குவிஜயம் செய்து வருகிறேன்" என்று புறப்பட்டு விடுகிறாள். தந்தையில்லாத அம்மை, தாயின் மனக்கவலையைத் தீர்த்துவைக்கும் பொருட்டு, தனது நாயகனான சிவபெருமானையடைய திக் விஜயம் என்ற வியாஜம் கொண்டு புறப்பட்டு விடுகிறாள் என்பது குறிப்பு. அவ்வாறு புறப்பட்ட அம்மையார் எழு திக்குகளையும் அடைந்து யாவரையும் வெற்றிகொண்டு வட திசையில் கைலாயம் நோக்கி வருகின்றாள்.

மிதிலைக்கு வரும் இராம லட்சுமணரை "எங்கள் அரசியைத் திருமணஞ் செய்து கொள்ளும் மணமகனே வா! வா!" என்று மிதிலை தன் கையை நீட்டி அழைத்த மாதிரி இருந்தது மிதிலையில் கொடிகள் ஆடிய காட்சி என்பர் கம்பர். அம்மாதிரி கைலாய மலையில் மீனாட்சிக்கு வரவேற்புக் கிடைத்தது எனக்கூறுகிறார் பரஞ்சோதி மாமுனிவர். மலை அரசனின் குமாரியான பார்வதி தன்னைவிட்டுப் போனவள் மீண்டும் தன்னிடம் வருகிறாள் என்று அருவியாகிய கண்ணீர்விட்டு அந்த நீரின் ஒலியால் "அன்னையே வா! வா!" எனக் கைலாயம் அழைக்க அவ்விடம் செல்கிறாள் மீனாட்சி.

*வானார் கயிலை மலையான்மகள் தன்னை நீத்துப்*
*போனாள் வந்தாளென்று அருவிகட்புனலுக்கு அந்நீர்*
*ஆனாவொலியால் அணைவா வென்றழை இத்தன் தேசு*
*தானா நகையாற்றழீ இயெதிரேற்பச் சென்றாள்*

அவ்வாறு கைலையை அடைந்த அம்மையுடன் சிவகணங்கள் போர் புரிந்து தோற்றோடி விடுகின்றன. இதையறிந்த நந்தி தேவர் சிவபெருமானுக்கு நடந்ததைக்கூற இறைவன் தானே நேரகப் புறப்படுகிறான். தேவியார் இறைவனைக் கண்டாள் முழுவதுமா? இல்லை! தன் வலப்பாதியைத்தான் கண்டாள். இடது

பாதி அம்மைதானே. அம்மையப்பர் என்றும் பிரியாதவர் என்பது குறிப்பு.

∴ ∴ ∴

அம்மையப்பனாக வந்த இறைவனைப் பல புலவர் பெருமக்கள் பலவிதமாக அனுபவித்துள்ளனர். மகாவித்வான் திரிசிபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள், தனது அகிலாண்ட நாயகி மாலையில் ''தாயே! நீ கண்ணாடியில் அலங்காரஞ்செய்து கொள்ளுவதற்காகப் பார்க்கையில் வலம் இடமாகவும், இடம் வலமாகவும் தெரியும். உன் வலப்பாதி இடப்பாதியாகவும் இடப்பாதி வலப்பாதியாகவும் தெரியும். கண்ணாடியில் தெரியும் வலப்பாதியில் உன் உருவம் தெரியும். இடது பாதியில் நானிருக்கும்போது இறைவனுடைய வலது பாதியிலிருப்பவள் யார்? எனக் கோபித்துக் கொண்டுவிடாதே'' என்கிறார்.

*இறையவன் வாமத்துறையுநீ தொழில் செய் இமையவர் [தருப்பணம் காட்ட*
*மறைவின் மற்றதனை நோக்கியவ் விறைவன் வலப்புறத் தொருமடக்கொடிநன்*
*குறைவதென்' என மற்றவனொடு பிணங்கேல் உற்றுநோக்கி ]டில் பிழையில்லான்*
*கறைமலி களத்தன் வளத் திரு ஆனைக்கா அகிலாண்ட [நாயகியே.*

∴ ∴ ∴

வலப்புறத்தும் இடப்புறத்தும் உள்ள அழகுகளை வருணிக்கிறார் திருவண்ணாமலை புராண ஆசிரியர்.

*அடுத்த செஞ்சடை யொருபுறம்: ஒரு புறம் அளகம்*
*தொடுத்த கொன்றையோர்புறம்: ஒரு புறமலர்த்தொடையல்*
*வடித்ததூல மோர்புறம்: ஒரு புற மலர்க்குவளை*
*திடத்திலார் கழலொருபுறம்: ஒருபுறஞ்சிலம்பு.*

*பச்சை வண்ண மற்ெருரு புறம்: ஒரு புறம்பவளம்*
*கச்சுலாமுலை யொருபுறம்: ஒரு புறம்கவின்மார்*
*அச்ச நீக்கிய வரதம் ஒன்று; அபயமொன்று அங்கை*
*இச்சையாமிவ ருறுதல் கண்டிறைஞ் சினுரிமை யோர்*

—அருணுசல புராணம்

மகாவித்வான் திரு மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்கள்.

*''ஆலும் விடமமுதமாக்கும் காமர்பதித் திருமூலவமலனுர்க்குச்*
*சாலு மணிக் குழையொரு பால்: தோடொருபால். முத்தொரு*
*[பால்: சர்ப்ப மொருபால்:*
*ஏலுநற்குங்கும மொருபால்: நீறெருபால்: பட்டொருபால்:*
*[இயை தோலோர்பால்*
*ஒலிடு பொற் சிலம் பொருபால்: கழலொருபால் பன்னுளும்*
*[ஒளிருமன்றே.''*

என்று கூறுவார்.

∴ ∴ ∴

இவ்வாறு அம்மையப்பனுக இருந்து, பிரிந்து மீண்டும் ஒருவரை யொருவர் சந்திக்கும்போது அம்மையின் அதிக உறுப்பு மறைந்து விடுகிறது. வீராங்கனையாக வந்த அம்மை தனது மென்மையான பெண்மைக் குணங்கள் மேலிட தலைகுனிந்து நின்று விடுகிருள் எனக் கூறும் அழகிய சொல்லோவியம் இதோ!

*கண்டவெல்லை யிலொருமுலைமறைந்தது கருத்தில் நாண்மடம்*
*[அச்சம்*
*கொண்டமைந்திடக் குனிதர மலர்த்தபூங் கொம்பரினெசிந்*
*[தொல்கி*
*பண்டையன்பு வந்திறை கொளக் கருங்குழற் பாரமும் பிடர்*
*[தாழக்*
*கெண்டையுண் கணும்பு றவடி நோக்க மண்கிளைத் துமின்*
*[னென நின்ருள்.*

"தேவி! என்று நீ மதுரையை விட்டுத் திக்குவிஜயம் செய்யப் புறப் பட்டாயோ, அன்று முதல் உன்னைப் பிரியாது நாமும் கூட வந் தோம். உன்னைச் சோமவாரத்தன்று மதுரையில் வந்து திரு மணஞ் செய்து கொள்ளுகிறோம். மதுரைக்குப் போ'' என்று கூறுகிறான் இறைவன்.

தேவியார் தாக்ஷாயணியாக வந்த காலத்தும் பார்வதியாக வந்த காலத்தும் திங்கட்கிழமையே திருமணம் புரிந்துகொண்ட மையால் இப்போதும் திங்கட்கிழமை வருகிறேன் எனக் கூறினன் போலும்!

இவ்வாறு விடை கொடுத்த இறைவனை வணங்கி மதுரையடை கின்றாள் மீனாட்சி அம்மை. மதுரையில் திருமணம் பற்றி செய்தி பரவுகிறது. எல்லா வீடுகளும் அலங்கரிக்கப் பெறுகின்றன. திருக்கல்யாணம் என்றைக்கு என ஒருவரையொருவர் விசாரிக்கின் றனர். வரும் திங்கட்கிழமை எனச் சிலர் கூற அந்த ஆறு நாளும் ஆறுயுகம் மாதிரி இருக்கின்றதே என்கின்றனர். மீனாட்சியின் கலியாணத்தைக் காண்பதற்காகத்தான் நமக்கு தோள்கள் துடித் தனபோலும் என்கின்றனர். பழைய நகைகளைப்புதுப்பிக்கின்றனர். ஊரெங்கும் ஒரே ஆடல் பாடல். அரண்மனையிலும் அலங்காரங்கள் செய்யப்பட்டு ஓமகுண்டங்கள் முதலானவை நிர்மாணிக்கப்படுகின் றன. திருமண வோலை கண்டு அரசர்கள் கூடுகின்றனர். இனிக் கைலாயத்திலிருந்து இறைவன் மணக்கோலங் கொண்டு வரும் அழகைக் காண்போம்.

∴ ∴ ∴

அம்மை பராசக்தி மதுரை சென்றபின் இறைவன் கைலாயத் திற்கு யாவரையும் அழைக்க இறைவனது திருக்கலியாணத்தைக் காண மதுரை செல்லும் பயணத்தோடு

*சுரிசங்கேந்திய திருநெடுமோலும்*
*வான் முறை படைத்த நான்முகத் தொருவனும்*

இன்னும்

*பீடுயர் தோற்றத்துக் கோடியுருத்திரரும்*
*ஆனுப் பெருந்திறல் வானோர் தலைவனும்,*
*வரம்பரியருக்கர் தாம் பன்னிருவரும்*
*சந்திரனொருவனும்: செந்தீக் கடவுளும்:*
*நிருதியும்: சமனும்: வருணனும் வாயுவும்:*
*எட்டு நாகமும் அட்டவசுக்களும்:*
*மூன்று கோடியான்ற முனிவரும்*
*வசிட்டனும் கபிலனும் அகத்தியன்தானும்*
*தும்புரு நாரதர் என்றிரு திறத்தரும்,*

அனைவரும் கைலாயம் வந்தடைகின்றனர். குபேரனால் அலங்காரம் செய்யப்பட்ட இறைவன் ரிஷப வாகனத்தில் மதுரை நோக்கி வரலானார். மதுரையில்

*தேவர்கள் தேவன்வந்தான்! செங்கண்மால் விடையான் [வந்தான்!*
*மூவர்கள் முதல்வன் வந்தான்! முக்கணெம்பெருமான் [வந்தான்!*
*பூவலரயன் மால்காணாப் பூரண புராணன் வந்தான்!*
*யாவையும் படைப்பான் வந்தான் என்று பொற்சின்னமார்ப்ப*

என்று சின்னங்கள் விருதுகளுடன் இறைவன் வருகின்றான்.

மீனாட்சியம்மையைத் திருமணம் புரியவந்த இறைவனைக் கண்ட மக்கள் "இந்த அழகனைத் திருமணம் செய்து கொள்ள நம் அரசி என்ன புண்ணியம் செய்தாளோ" என்றும் "நம் அரசியைத் திருமணம் செய்து கொள்ள இப்பெருமான் எத்தவம் புரிந்தானோ?" என்றும் "இத்திருமணம் நடைபெற இம்மதுரை என்ன புண்ணியம் செய்ததோ?" என்றும் "இத்திருமணத்தைக் காண மதுரை மக்களாகிய நாம் என்ன புண்ணியம் செய்தோமோ!" என்றும் "இத்திருமணத்தைக் கண்டு களிக்க நம் அரசனான மலையத்துவச பாண்டியன் இல்லையே" என்றும் மக்கள் பற்பல விதமாகப் பேசிக் கொள்ளுகின்றனர்.

இறைவன் உலாவருங் காலத்தில் அப்பெருமானுடைய அழகைக்கண்ட ஒருத்தி அயலில் நின்ற ஒரு சித்திரக்காரனைப் பார்த்து ‘‘இவ்வழகனைப் படம் எழுத்தித்தருவாயா?’’ எனக் கேட்க ‘‘அது யாரால் முடியும்? இந்த அழகை யாரால் எழுத முடியும்?’’ என்று கேட்க, தனக்குச் சித்திரத்தில் கூட அந்த அழகன் கிடைக்க மாட்டான் என எண்ணி அவள் மூர்ச்சித்து விடுகிறாள்.

இராமபிரான் மிதிலையில் உலாவந்தபோது இராமனைக் கண்ட பெண் ஒருத்தி எங்கு பார்த்தாலும் இராமனாகவே கண்டாளாம். ‘‘ஐயோ! வேறுயாருமில்லையே! இவன் தனியாக வருகிறானே!’’ என்றாளாம். ‘‘வேறொன்றும் காண்கிலாதாள் தமியனோ வள்ள லென்றாள்.’’ என்கிறது கம்பன் காவியம். அம்மாதிரி பிரமன் –திருமால்-தேவர்கள் யாரையும் காணாது எங்கும் சிவமயமாகக் காண்கிறாள் ஒரு பெண்.

*வலத்தயன் வரவு காணாள்: மாலிடம் காணாள்: விண்ணோர்*
*குலத்தையும் காணாள்: மண்ணோர் குழாத்தையும் காணாள் [ஞானப்*
*புலத்தவர் போல கண்டபொருளெலாம் மழுமான் செங்கைத்*
*தலத்தவன் வடிவாக்கண்டாளொரு தனித் தையல்மாது.*

இறைவனை எதிர் கொண்டழைப்பதற்கு, சிலசுமங்கலிகளான பெண்களையனுப்பிக் காஞ்சனமாலை தான் பின்னால் வந்து, சிவ பெருமானுடைய திருவடிகளைக் கங்கை நீர் விட்டு அபிடேகம் செய்து, சந்தனம் தெளித்து, மலரிட்டுவழிபட்டு ‘‘இறைவனே; அடியேனுடைய மகளைத் திருமணம் செய்து கொண்டு இந்நாட்டை யும் வகித்து அரசாட்சி செய்ய வேண்டும்’’ என்று கூற, இசைந்த இறைவன் கலியாண மண்டபம் அடைகிறார். சகல தேவதை களும் சகல உலகத்தவரும் மதுரையில் இம் மகோற்சவத்தைக் காண்பதற்காகக் கூடிவிட்டனர். பூமி தாங்கியது தெற்குதாழ வில்லை. ஆனால் இதே மாதிரியான திருமணம் வட நாட்டிலே நடந்தபோது, தென்னாடு உயர்ந்து, கனம் தாங்காமல் வடநாடு தாழ ஆரம்பித்தபோது இறைவன் அகத்தியரை அழைத்து

"தென்னாடு செல்லுக, உலகம் சமமாக நிற்கும்" எனக்கூற அவ்வாறே நிகழ்ந்தது. அதே அகத்தியர் உள்படத் தென்நாட்டில் இக் கலியாணத்திற்காகக் கூடியிருக்கத் தென்பூமி தாங்கியது. இது இறைவனருளே என்கிறார் பரஞ்சோதி. இறைவன் அருமை யானதொரு நடனத்தை ரசித்துக் கொண்டிருக்க அம்மையார் திருமணக் கோலங் கொண்ட அழகைக் கூறுகிறார் கவிஞர்.

∴ ∴ ∴

அம்மையார் திருமஞ்சனமாடி, சரசுவதி லட்சுமியாகியவர் களால் அலங்கரிக்கப்படுகிறாள். கற்பகத்தரு தேவியாருக்கு வேண் டிய நகைகளை யளிக்கிறது. மங்கல வாத்தியங்கள் ஒலிக்க, மலர் மாரி பொழிய, திலோத்தமை கண்ணாடி எடுத்துவர, ஊர்வசி ஆல வட்டம் வீச, மேனகை மலர்த்தட்டெடுக்க, லட்சுமி சரசுவதியர் கை கொடுக்க, அம்மை சிவபெருமான் பக்கத்தில் எழுந்தருளினாள். அப்போது இறைவன் திருவடியை விளக்கி ஆசிபெற்ற திருமால் மீனாட்சியம்மையின் கரத்தைச் சிவபெருமானது கையில் வைத்து, தன் வாயால் மந்திரங்களைச் சொல்லித் தாரை வார்த்தார்.

*அத்தலை நின்ற மாயோன் ஆதி செங்கரத்து நங்கை*
*கைத்தலம் கமலப்போது பூத்ததோர் காந்த ளொப்ப*
*வைத்தரு மனுவாயோதிக் கரகநீர் மாரி பெய்தான்*
*தொத்தலர் கண்ணி விண்ணோர் தொழுது பூமாரி பெய்தார்*

அரம்பைகள் ஆடினார்கள். வித்யாதரர்கள் பாடினார்கள். முனி வர்கள் ஹர ஹர என்று கூறி வணங்கினார்கள். சிவகணத்தினர் சிரமேற் கரங்குவித்து வணங்கினார்கள். சாக்கிய நாயனார் என் னும் பக்தர் கல்லை விட்டெறிந்த காலத்தில் அது மலராக இறை வன் திருவடியில் விழுந்தது. அப்பேர்ப்பட்ட திருப்பாதத்தில் குங் குமம் தோய்ந்த அரிசி எடுத்து வீசி வேதமந்திரங்களைப் பெரியோர் கள் கூறினார்கள். "எக்காரணம் கொண்டும் பிரியாத தெய்வீக தம்பதிகளாகிய இவர்கள் தனித்தனியானவர் மாதிரி போக்குக் காட்டி நாம் கண்டுகளிக்க வேண்டுமென்ற கருணையால் கல்

யாணம் செய்து கொள்கின்றுர்களே; இவர்கள் கருணையே கருணை'' என அனைவரும் பேசுகிருர்கள்.

*அம்மையோடப்பனென்ன அலர்மணம் போல நீங்கார்*
*தம்மருள் விளையாட்டாலேயாற்றநாள் தமியர் போல*
*நம்மனோர் காணத் தோன்றி நன்மணம் புணர ஞாலம்*
*மும்மையும் உய்ந்த என்னுத் தத்தமின் மொழியலுற்றுர்.*

இறைவன் மதுவர்க்கத்தைத் தீண்டி முறுவல் செய்து திருப்தி யடைந்தபின் சரசுவதி லட்சுமி மங்களகரமான பாடல்பாட, தெய் வீக அக்கினியானது வலஞ்சுழித்து எழுந்தது. அப்போது நாலு வேதங்கள் கோஷிக்க, வாத்தியங்களும் சங்குகளும் முழங்கவும், பிரமன் சடங்குகளை வேதத்திற்கூறிய பிரகாரம் செய்து வைக்க, அம்மையின் திருக்கழுத்தில் திருமாங்கலியம் பூட்டி, பற்றற்ற வருக்கு மோட்ச வீடளிக்கும் இறைவன் அம்மையின் திருக்கரத் தைப் பற்றினுன்.

*சுற்று நான்மறைகளார்ப்ப: தூரியம் சங்கம் ஏங்க;*
*கற்ற நான்முகத்தோன் வேள்விச்சடங்கு நூல்கரைந்த [வாற்றுன்*
*முற்ற மங்கலநாண்சாத்தி முழுதுலகீன்ற..ர் செங்கை*
*பற்றினன் பற்றிலார்க்கே வீடருள் பரமயோகி.*

எல்லாம் சிவமயம். வேள்வித்தீயும் அவனே. தீயுண்டாக்கும் பிரமனும் அவனே: அம்மூலமாக உணவு கொள்ளும் தேவனும் அவனே புருடனும் பெண்ணுமாகித் திருமணம் புரிந்து கொண் டார் என்றுல் அந்த மகிமையை யார் கூறமுடியும்? பிறகு இறை வன் தீயில் பொறியிட்டு, தான தருமங்களைச்செய்து தீயை வலம் வந்தார். அம்மை பராசக்தியின் திருப்பாதத்தை அம்மியின் மீதிட்டு கல்யாணத்திற்கு வந்திருந்த அருந்ததி வசிட்டர் ஆகிய வரைப்பார்த்து அருளினுர். அம்மிமீது கால்வைத்த அம்மையை மகாவித்வான் பிள்ளையவர்கள் ''அம்மிக் கல்மீது கால்வைத்த நீ அடியேனுடைய மனமான கல்லிலும் காலைவைத்துக் காப்பாற்று வாய் என எண்ணி உன்னைத் துதிக்கிறேன்'' என்று பாடுகிருர்.

*விழிவிருந்துதவும் நின்திருமணத்தில் விமலஞர் கரமலர் மேற்*
*[கொண்டு*
*ஒழிவருகருங்கல் மிசையுறு நின்தாள்: உற்ற என்கரமலர்*
*[மேற்கொண்டு*
*இழிவற அடியேன் மனக்கலினிடத்தும்இயைந்துறும் என்று*
*[ஊைத்துதித்தேன்*
*கழிநசைமுனிவர் சூழ்திருவாணைக் காவகிலாண்ட நாயகியே.*

இவ்வாறு திருமணமானபின் இறைவன் மாறிய பெருமையையும் அழகையும் கூறுகிறர். வரும்போது கொண்டுவந்த ரிஷபக் கொடி மீன்கொடியாக மாறிற்று: பாம்பணிகள் பொன்னணிகளாயின: கடுக்கைமலர் வேப்பமாலையாயிற்று: புலித்தோல் பொன்னுடையாகவும்: சந்திரமுடி வைரமுடியாகவும் மாறி இறைவன் சோமசுந்தரபாண்டியன் என விளங்கினுன்.

*அதிர்விடைக் கொடி அங்கயற்கொடியாக: அராக் கலன்*
*[பொற்கலஞக*
*பொதிய விழ் கடுக்கை வேம்பலராக: புலியதள் பொலந்து*
*[கிலாக*
*மதிமுடி வைரமணிமுடியாக: மறைகிடந்தலம்பு மாமதுரைப்*
*பதியுறை சோமசுந்தரக்கடவுள் பாண்டியஞகி வீற்*
*[றிருந்தான்.*

பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் ''என் அம்மை மீனுட்சியைத் திருமணம் செய்து கொண்டபின்தான் சிவபெருமான் பெரிய மனிதராகி விட்டார்'' எனக்கூறி வியக்கிறர்.

*ஆனையுரித்து அதள்தனைப் போர்த்திட்டு அடியும்பட்டு*
*மானமழிந்து அங்கே இரந்தே திரிந்த மதுரைச் சொக்கர்*
*ஞானமிகப் பெற்று வாழ்ந்த தெல்லாம் சொக்கநாயகியாள்*
*பாணிபிடித்த முகூர்த்தத்திஞல் வந்தபாக்கியமே.*

இதே பொருள் கிடைக்கும்படி பரஞ்சோதியார் இறைவனைக் காப்பிலேயே பாடிவிடுகிருர்.

*சடைமறைத்துக் கதிர் மகுடந்தரித்து நறுங்கொன்றையந்*
*தார்தணந்துவேப்பந்*
*தொடைமுடித்துவிடநாகக் கலனகற்றி மாணிக்கச் சுடர்ப்*
*[பூணேந்தி*
*விடைநிறுத்திக்கயலெடுத்து வழுதி மருமகனுகி மீனநோக்கின்*
*மடவரலை மணந்து உலகமுழுதாண்ட சுந்தரனை வணக்கஞ்*
*[செய்வாம்.*

அவ்வாறு சோமசுந்தர பாண்டியனுக இறைவன் விளங்கிய காலத்தில் உலகத்தவர் சிவபூஜையை விடாது நடத்தவேணு மென்று காட்டுவதற்காக தானே ஒரு சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூஜித்தனர் என்ப. [கல்லாடம் என்னும் நூலில்

*''கடுக்கை மலர் மாற்றி வேப்பலர்சூடி*
*ஐவாய்காப்புவிட்டணி பூணணிந்து*
*விரிசடைமறைத்து மணி முடிகவித்து*
*விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடி எடுத்து*
*வழுதியாகி முழுதுலகளிக்கும்*
*பேரருள் நாயகன்''* என இறைவன் மதுரை நாயகனுக வந்ததும்

*''முலைமுன்றணைந்த சிலைநுதல் திருவினை*
*அருமறைவிதிக்கத் திருமணம் புணர்ந்து*
*மதிக்குலம் வாய்த்த மன்னவனுகி*
*மேதினி புரக்கும் விதியுடை நன்னுள்*
*நடுவூர் நகர்செய்து அடுபவந்துடைக்கும்*
*அருட்குறி நிறுவி அருச்சனை செய்த*
*தேவ நாயகன்''* என சிவலிங்கப் பிரதிட்டை செய்த தன் மையையும் கூறியுள்ளனர் பெரியோர்]

திருக்கலியாணம் முடிந்த பின்னர் இறைவன் உணவுண் பதற்கு அழைக்க ''இறைவனே! ஆனந்த நிர்த்தனம் காட்டும் உனது நடராஜத் திருக்கோலத்தை தரிசித்தபின்தான் உணவு கொள்வது எமக்கு வழக்கம்'' என்றனர், பொற்று மரையில் நீராடிக் கரையேறிய வியாக்கிரபாதர் பதஞ்சலி என்ற இரு முனிவர்களும்.

தில்லை நடராஜப் பெருமானுடைய பெருமை அளவிட முடியாதது. நடராஜப்பெருமானின் தோற்றம், அழகு, சிறப்பு யாவற்றையும் பல பெரியோர்கள் அனுபவித்துள்ளனர். அந்த அழகான நடனத்திருக் கோலத்தைக் காண்பதற்கு ''மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே'' என்கின்றார் நாவுக்கரசர். இறைவனுடைய திருக்கரத்திலுள்ள டமருகத்திலிருந்து உலகம் உண்டாகிறது: அபயத்திருக்கரம் காப்பாற்றுகின்றது. அக்கினியை ஏந்தியகரம் சம்ஹாரம் செய்கிறது. ஊன்றிய திருவடி திரோதனம்(மறைத்தல்) சக்தியுடையது. தூக்கிய திருவடி அநுக்ரகம் செய்கிறது.

*தோற்றந் துடியதனில் தோன்றும் திதியமைப்பில்*
*சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்*
*ஊன்றுமலர்ப் பதத்தேவுற்ற திரோதமுத்தி*
*நான்ற மலர்ப்பதத்தே நாடு* (உண்மை விளக்கம்)

நடராஜமூர்த்தியின் நடனம் மிகஅழகானது. நமது ஜனனமரண வினைப்பிணிகளுக்குமருந்து. குழந்தையின் குடல் மருந்தைக் குடித்துச் சீரணிக்கச் சக்தியற்றதாயிருந்தால் தாய் அம்மருந்தையுண்டு அதன் பயனைத் தன்பாலின் மூலம் குழந்தையடையும்படி செய்வதுமாதிரி, அம்பிகை நடராஜமூர்த்தியின் திருநடனத்தைத்தான் தரிசித்து தன்அருள் மூலமாக உலகிற்கு அளிக்கின்றாள். ''இல்லறம், துறவறம் இரண்டும் எனக்கு ஏற்காதவை. முக்தியடைய வேறு என்னவழி என யோசித்தேன். திருவாரூரில் பிறத்தல் நன்மையென்றனர். நான் ஏற்கனவே வேறிடத்தில் பிறந்துவிட்டதால் இது எனக்குக் கிடைக்காது. காசியில் இறத்தல் நன்மை என்றனர். நிலையில்லாத உலகில் காசி செல்லும் வழியிலேயே இறந்துவிட்டால்? சிதம்பரத்தில் நடராஜமூர்த்தியாக விளங்கும் பெருமானே! உன்னை தரிசித்தால் முக்தி கிடைக்குமென்றனர். இங்கு வந்து விட்டேன். எனக்கு பக்தியில்லை. அன்பு இல்லை என ஏதாவது கூறி என்னைத் தள்ளி விடாதே! இறைவா! நீ ஒரு மருந்து. மருந்தை மகிழ்ச்சியுடன் சாப்பிட்டாலும், முகஞ்சுளித்து தலை நடுக்கமெடுத்து வெறுப்புடன் சாப்பிட்டாலும் இருவருக்கும் கொடிய பிணியகற்றி விடுமன்றோ? அந்

நிலையில் சனனமரண பிணியகற்றும்நீ எனக்கு பக்தியிருந்தாலும் இல்லாவிட்டாலும் காத்தருள்வாயாக'' என குமரகுருபர சுவாமிகள் கூறுகின்றார்.

''பெண்கள் நடனமாடக்கூடிய காட்சியைப் பார்த்து மகிழும் பேதையான நான் பிரம விட்டுக்களுக்குக் கிடைக்காத உன் நடனத்தை அனுபவித்து ஆனந்திப்பது என்றோ?'' எனக்கூறுகின்றார் மகாவித்வான் திரிசிரபுரம் ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்.

*வரியமர் முலையார் புரிநடம்நோக்கி மகிழுமதொழிந்து மால [யற்கும்*
*அரியநின்னடம் அன்பூற்றெழ நோக்கி ஆனந்தமடைவது [என்றோ?*
*பொரியரை மாச்சூர் மாவினம் என்று புரந்தரன் ஆங்குயிற் [கினமாம்*
*கரியபைங்குழல்கள் சினைபுகுந்துழக்கும் கலைசைவாழ் சிதம் [பரேச்சுரனே.*

∴ ∴ ∴

சிவபெருமான் தீயுருவாகக் காட்சியளித்த திருவண்ணாமலையிலே பிரமவிட்டுக்கள் அடிமுடிதேடிக் காணக்கிடைக்காது தவித்தனர். ''ஏ! மனமே! நீ பிரமனுமில்லை! திருமாலுமில்லை! சிதம்பரத்தலத்தில் உள்ள நடராஜமூர்த்தியும் தீயுருவுடனில்லை. நீ பாக்கியவான் ஆதலால் அம்மை சிவகாமவல்லியுடன் இறைவன் நடனமாடும் காட்சியைக் காணும்பாக்கியம் உனக்குக்கிட்டியுள்ளது'' என்கிறார் சிதம்பரத்தல புராண ஆசிரியர்.

*காதரமார் தருமனமே! கமலமலரயனல்லை!*
*சீதரமாயனுமல்லை! சிவனும் அனற்றிரளல்லன்!*
*நீதரமாயருளுடையேல்! நிலைகலங்கேல்! இனிமன்றில்*
*ஆதரமாதுடனும் அண்ட நடங்கண்டனையால்.*

∴ ∴ ∴

இவ்வளவு பெருமையுள்ள நடராஜமூர்த்தியைத் தரிசித்தபின் தான் உணவு கொள்ளுவது என்ற வழக்கம் இன்றும் சிதம்பரம் மக்களில் சிலரிடம் உண்டு, அப்பேர்ப்பட்ட காரியத்தையே செய்ய

நாங்களும் ஆசைப்படுகிறோம் என்கின்றனர் வியாக்ரபாதர், பதஞ்சலியாகிய உத்தமர்கள்.

*பொன்னவிர் கமலம்பூத்த புனித நீராடித்தத்தம்*
*நன்னெறி நியமமுற்றி நண்ணினர் புலிக்காலோனும்*
*பன்னகவரசும் தாழ்ந்து பரவியம் பலத்துளாடும்*
*நின்னருள் நடங்கண்டுண்ப தடியேங்கள் நியமமென்றார்.*

''அப்படியாயின் அக்கூத்தை இங்கு ஆடிக்காட்டுகிறேன்'' என இறைவன் கூற, அவ்விடத்தில் ஒரு வெள்ளியம்பல மண்டபம் தோன்றியது கயிலைமலைதான் உருமாறி வந்ததோ? அல்லது இறைவன் ஏறிவரும் ரிஷபந்தான் அம்மேடையாக மாறியதோ? சந்திரமண்டலமே வந்து விட்டதோ'' என அனைவரும் அதிசயித்தனர். அம்மேடையில் கோடி சூரியப் பிரகாசத்துடன் இறைவன் தோன்றுகிறான். சிவகணங்கள் மொந்தையெனும் வாத்தியம் வாசிக்க, நந்திதேவர் மிருதங்கம் வாசிக்க, நாராயணமூர்த்தி இடக்கையில் தாளம்போட, நாரதர் தும்புரு பாட இறைவன் ஆடுகின்றான். அடிமுதல் முடிவரை ஆடும்போது ஏற்பட்ட ஓசை. சிரத்தில் கங்கையின் ஓசை, மார்பில் புரளும் மாலையிலுள்ள தேனைச்சாப்பிட வண்டுகளின் ஓசை, மங்கலகரமான மத்தளத்தின் ஓசை. கையில் உள்ள அக்னியின் ஓசை. மந்திரங்களைக் கூறும் ஓசை. திருவடிச்சிலம்பின் ஓசை இவ்வளவும் சேர்ந்து அன்பர்களின் ஆனந்தத்தை எல்லையற்றதாகச் செய்துவிட்டது.

*கங்கையாறலம்புமோசை: கடுக்கை வண்டிரங்குமோசை*
*மங்கல முழவினோசை: மந்திர கீதவோசை:*
*செங்கையாடெரியினோசை: திருவடிச் சிலம்பினோசை:*
*எங்கணும் நிரம்பியன்பர் இருசெவிக்க முதமுற்ற.*

இவ்வாறு ஆடிய இறைவனது கோலத்தைக் கண்டு அனைவரும் சிரமேற் கரங்கூப்பி வணங்கினர். வியாக்ரபாதர் பதஞ்சலி இருவரும் எல்லையில்லா ஆனந்தம்கொண்டு தோத்திரம் செய்து பாடி மகிழ்ந்தனர். ''எமக்காக வெள்ளியம்பலத்திலாடிய கருணையை என்னென்போம்!'' என உருகுகின்றனர். நல்லோராகிய அவர்

களின் காரணமாக சாதாரண மனிதருக்கும் இந்த நிர்த்தனம் காணும் பேறு கிட்டியது. ஆட்டம் முடிந்தபின் ''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என இறைவன் அம்முனிவீர் பெருமக்கள் இருவரையும் கேட்க, ''இறைவனே! இதே நிலையில் நின்று மதுரையில் அனைவருக்கும் காட்சி கொடுத்து உலகத்து மக்கள் யாவருக்கும் அருள்புரிய வேண்டும். நாங்கள் பெற்ற பேறு அனைவரும் பெற்று ஆனந்திக்க வேண்டும்'' என அவர்கள் வணங்கி வரம் வேண்ட ''அப்படியே ஆகுக!'' என்றார்.

*எந்தையித்திருக் கூத்தென்றும் இந்நிலை நின்றுயார்க்கும்*
*பந்தவெம்பாசம் நீங்கப் பரிந்தருள் செய்தி என்னச்*
*செந்தமிழ்க் கன்னிநாடு செய்த மாதவப் பேறெய்தத்*
*தந்தனம் என்றான் வேதந்தலை தடுமாற நின்றான்.*

தில்லை நடராஜரைப்பற்றிக் கூறும்போது ''மூர்த்தி சிறிது கீர்த்தி பெரிது'' என்பார். மதுரை நடராஜரோ ''மூர்த்தியும் பெரிது. கீர்த்தியும் பெரிது.'' மாப்பிள்ளைத் திருக்கோலத்தில் நடனமாடியதால் பெரிய திருவுருவத்துடன் விளங்குகின்றார் போலும் இப்பெருமான்!

நடனம் முடிந்தபின் அனைவரும் உணவருந்துகின்றனர். இறைவன் அள்ள அள்ளக் குறையாத அமுதம் போன்றவன். ''*அடி சார்ந்தவர்க்கு முடியா இன்பம் நிறையக் கொடுப்பினும்—குறையாச் செல்வன்*'' என்பார் பட்டினத்தார். இறைவனுடைய திருமணத்தில் அனைவரும் உணவருந்திய பின்னும் உணவுப் பொருள்கள் குறையா திருக்கின்றன. இதையறிந்த மீனாட்சி அம்மையார் இறைவனிடம் சென்று ''பிரபு! முப்பத்து முக்கோடி தேவதைகளுடன் தாங்கள் எழுந்தருளுகின்றீர்கள் என்று எண்ணி நிறைய உணவு தயார் செய்யப்பட்டது மிகவும் அதிகமாக மிஞ்சி விட்டன'' எனக்கூற, ''நீ பெரிய செல்வர் வீட்டுப்பெண் என்பதையறிவிக்க இவ்வளவுஉணவுப் பொருள்களைத் தயாரித்தனை போலும்! உண்டுகளைத்து உறங்குபவரைத் தவிர இங்கு பசியால் களைப்படைந்திருப்பவர் ஒருவரையும் காணவில்லையே'' எனக் கூறிய இறைவன் தன் பக்கத்தில் நின்ற குண்டோதரனின் வயிற்றில் வடவாமுகாக்

கினியை வருமாறு நினைக்கிறுன், வயிற்றில் அக்னி வந்தவுடன் குண்டோதரன் திடீரென்று பசியெடுக்க, உடல் சோர்ந்து ''ஐய! பசிதாங்கவில்லையே!'' எனக்கதறுகிறுன். ''தேவி! குடையெடுக்கும் இவனுக்குச் சிறிது சோறிடு. இன்னுமிருந்தால் பின்னுல் பார்க்கலாம்'' என்று கூற குண்டோதரனை அழைத்துக் கொண்டு மீனுட்சியம்மை செல்லுகிறுள்.

குடையெடுக்கும் இக்குறியதாள் க்ுறட்கொரு பிடிசோறு
இடுமின் அப்புறப் சோறுமாலென: தொழுது எல்லாம்
உடையநாயகி போயினுள்: குறியனுமுடனே
நடைதளர்ந்து: கண்புதைத்து: வாய் புலர்ந்திட நடந்தான்.

''எல்லாம் உடையநாயகி'' எனதேவி உபாசகரான பரஞ்சோதி கூறுவதிலிருந்து எத்தனை குண்டோதரர் வந்தாலும் சோறு போடக்கூடியவள் எனக் குறிக்கின்றுர் எனத் தோன்றுகிறது. ஸ்ரீ லலிதாம்பிகையின் ஆயிரநாமங்களை எழுதிய உத்தமர் ''ஓம் ஸ்ரீமாத்ரே நம:'' என்க்கூறினுர். மாதா என்பவள குழந்தைகளை ஆதரிக்கக்கூடியவள். ஏழையாயிருந்து விட்டால்! இல்லை! உலகத்திற்கெல்லாம் மாதாவாக விளங்கும் அவ்வம்மை ஒரு மகாராணி என்பதால் எத்தனை குழந்தைகளை வேண்டுமானுலும் காப்பாற்றுவாள் என்பது தொனிக்க அடுத்த நாமாவளி ''ஓம் மகாராஞயே நம:'' ''மகாராணியே நமஸ்காரம்'' என்றுர் இதையெல்லாம் மனத்தில் கொண்டே பரஞ்சோதி மீனுட்சியம்மையை ''எல்லாம் உடைய நாயகி'' என்றுர் போலும்! மீனுட்சிஅம்மை தன் தோழியர் சிலரையழைத்து, குண்டோதரனுக்கு உணவு அளிக்கும்படி கூற, அவர்கள் அவனைச சமயலறையில் கொண்டு போய்விட, அவன் அங்கு மலைமலையாக குவித்து வைக்கப் பட்டிருந்த சாப்பாடு பூராவும் சாப்பிட்டு விடுகிறுன். எப்படிச் சாப்பிட்டான் எனத் தெரியவில்லை. ஆனுல் சாப்பாட்டுக் குவியல்களைக் காணும். பழவகைகள், கலியாணத்திற்காகச் செய்திருந்த விசேடமான உணவுகள், சருக்கரை, கரும்பு, தேங்காய் யாவற்றையும் சாப்பிட்டும் பசிதீராமல் பச்சைக்காய்களையும், நவதானியங்களையும் மூட்டை மூட்டையாகத் தின்றுவிடுறுன். தின்னத்தின்ன பசியதிகமாகி விடுகிறது. இது கண்டு அதிசயமடைந்து அம்மை இறைவனையடைந்து சங்கதியை அறிவிக்கிறுள். அந்நேரத்தில்

குண்டோதரனும் அவ்விடத்தில் தோன்றி "பகவானே! என் தாய் மீனாட்சியளித்த சோறு நமது இமயமலை மாதிரி யிருந்தது. அவ் வளவையும் சாப்பிட்டேன். சாப்பிடாது பட்டினி கிடந்தவன் வயிறு மாதிரி காந்துகிறதே" என அலறுகிறான்.

*நட்டமாடிய சுந்தர! நங்கை எம்பிராட்டி*
*அட்ட போனகம் பனி வரையனையவாய்க்கிடந்த*
*தொட்டுவாய் மடுத்திடவும் என் சுடுபசி தணியாது*
*இட்டுணாதவர் வயிறு போல்காந்து வதென்றான்:*

"இட்டு உண்ணாதவர் வயிறு போல் காந்துவது" என்பதன் மூலம் ஏழைகளுக்குச் சோறு போடு. பின்னர் சாப்பிடு.(ஐயம் இட்டுண்) என்ற முதுமொழிப்படி ஏழைகளுக்குச் சோறு போடாதவர் வயிறு எப்போதும் பசியெடுத்துக் காந்தும் என்று சூசனையாகக் குறிப்பிடு கிறார் பரஞ்சோதி.

∴ ∴ ∴

இதுகண்டு இறைவன் தனக்குள்ளேயே சிரித்துக்கொண்டு, அன்னபூரணி என்னும் தன் தேவியின் அமிசத்தை நினைக்க, ஏழு குழிகளில் தயிர் சோறு தோன்றுகிறது. பாற் கடலுக்குள் மந்தரமலை விழுந்த மாதிரி, அக்குழிக்குள் இறங்கி குண்டோதரன் உணவருந்த, சிவபெருமானுடைய திருவடிகளை தியானித்த அன் பர்களின் பழைய பாவம் மறைந்தமாதிரி அவனுடைய பசியும் அடங்கி விடுகிறது.

*"சுருதி நாயகன் தாள்*
*பத்திவைத்து வீடுணர்ந்தவர் பழவினைத் தொடர் போல்:'*

என்கிறது பரஞ்சோதியாரின் திருவாக்கு:

மனிதன் உணவுண்ணும் முறையிலேயே ஒரு தத்துவம் மறைந்துகிடக்கிறது. முதலில் அவன் சாப்பிடுவது குழம்புசோறு. குழம்பு என்பது தானுடன் கூடியது (தான் என்பது இருந் தாலே குழம்பும் என்று குறிப்பு) அடுத்த வகை ரசம். அதாவது

தான் இல்லாதது. தான் என்பதுஇல்லாவிட்டால் தெளிந்திருக்கும் மனித நிலையைக் குறிப்பது ரசம் (தற்காலத்தைப் பற்றி அன்பர்கள் கூறுவது என் காதில் விழுகிறது. தக்காளி போட்ட ரசம் தான் போட்டது தானே என்று. காயோ கறியோ ஒரு திரவத்தில் விழுந்து விட்டால் அது குழம்பே. ஆதலால் அது தக்காளிக் குழம்புதான்) தெளிந்த நிலையில் இறைவனுடைய ருசியையனுபவிக்கிறன் என்பதைக் காட்டவே இனிய பாயசம் பறிமாறுகின்றனர். பின் இறைவனின் இனிமையை அநுபவித்துக்கொண்டே உலகத் துன்பங்கள் நிங்கி இறைவனுடைய குளிர்ச்சி பொருந்திய நிழலில் அமர்ந்திருப்பார் என்பதைக் காட்டுவதே தயிர்ச்சோறு.

குண்டோதரன் தயிர் சோறு சாப்பிட்டுப்பசி நீங்கினான் என்று கூறுவன் மூலம் எவ்வளவு ஒருவர் சாப்பிட்டாலும் மோர் அல்லது தயிர்தான் அவருடைய பசியைத் தணிக்கும் என்பதையறிகிறோம்.

தயிர் சோறு சாப்பிட்டுப் பசி நீங்கிய குண்டோதரன் தாகம் அடைந்து, மதுரையிலுள்ள குளம் கிணறு யாவும் வறண்டு போகும்படி குடித்தபின் இறைவனிடம் ''எவ்வளவு தண்ணீர் குடித்தும் தாகம் அடங்கவில்லையே!'' என முறையிட, இறைவன் தன் சடாமகுடத்திலிருக்கும் கங்கையிடம் ''தேவி! மதுரையின் வட புறத்திலே ஒரு நதியாக வா!'' என்கிறார். ''இறைவனே! அன்று பகிரதனுக்காக உலகத்தில் நதியாக ஓடிவந்து உலக மக்களுடைய பாபங்களைப் போக்கு என்றீர்கள். இன்றும் அப்படியாகும்படி கட்டளையிடும் பட்சத்தில் அடியேன் நதியாக வந்தபின் என்னைத் தரிசனம் செய்தவர், கையால் தீண்டினவர், சிறிது ருசிபார்த்தவர் யாவருக்கும் நன்மை செய்யும் நதியாக நான் வர அருள் செய்ய வேண்டும்'' எனக்கேட்க இறைவன் இணங்கினர்.

அவ்வாறே மதுரைக்கு வடபுறத்தில் கங்கை ஒருநதியாக வர, நடுவில் இறங்கிய குண்டோதரன் தனது இருகைகளையும் நீட்டித் தண்ணீரைத் தடுத்து வாயில் விழும்படி செய்து தாகம் தீர்ந்தான். சோறு கொடுத்த சொக்கநாயகர் தண்ணீரும் கொடுத்த தரும மூர்த்தியாகி விடுகிறர். தண்ணீர் குடித்த குண்டோதரன் மகிழ்ச்சி பொங்க, அன்பேயுருவான இறைவன் பாதத்தில் நின்று

கொண்டு, நல்ல வாக்கு ஏற்பட்டு, அழகிய பாடல்களைப் பாடி நின்று ஆனந்தமடைகிறான் மீனாட்சியம்மையையும் சோமசுந்தரப்பெருமானையும் வணங்கக் கூடியவர்களிடம் யமன் வந்தால் கூட உத்தமபக்தனான குண்டோதரன் அவனைத் தடுக்க வந்துவிடுவான் என்கிறார் ஒரு புலவர்

*பண்டோதரிய மறைபாடும் கூடற் பசுங்கிளியை*
*கண்டோதினேன்; என்கவலையெல்லாம் இனிக்காலன்*
*[திரண்டு*
*முண்டோதி வந்திடும்போது அம்மைகோயில் முன்னேதிரியும்*
*குண்டோதரன் கண்டால் துடைதட்டிக் கொள்ளுவானே.*

இப்பேர்ப்பட்ட தெய்வீக நித்திய தம்பதிகளான மீனாட்சி அம்மையும் சோமசுந்தரப் பெருமானும் நம் நாட்டிலுள்ள அனைவரையும் காப்பாற்ற வேண்டுகிறோம்.

தம்மையடைந்தவரைக் காக்குந் தன்மையுடையவள் உலக நாயகியான அம்மை.

''அன்னையே! யானைத்தோலை உரித்து ஆடையாக அணிந்திருப்பவன் சிவபெருமான். வீடு தோறும் பிச்சை வேண்டுமென வாங்கிப் புசித்து வாழுபவன். காட்டில் பிசாசுகளுடன் நடனம் செய்யக்கூடியவன். உலகத்தவரால் பித்தனென்று அழைக்கப்பட்ட இப்பெருமான் உன்னைத் திருமணம் செய்துகொண்டு அம்மி மிதிப்பதற்காக உன் திருவடியைப் பற்றினான். உன் திருவடியைத் தீண்டிய பெருமை மும்மூர்த்திகளில் முதல்வனாக அப்பெருமான் விளங்கும்படி செய்து விட்டாயே! உன் கருணையே கருணை'' என்கிறார் வைரவன் கோயில் வடிவுடை நாயகி பிள்ளைத்தமிழாசிரியர்.

*அத்தியுரித் ததளைக் கலையாக*
*அணிந்து களிப் புறுவோன்*
*ஐயந்தம்மின் தெரிவை யிரென்ன*
*அகந்தொறு மேற்றுண் போன்*
*நத்துபு சுடலையினடலையை என்று*

நயந்து தரித் திடுவோன்
நாணில லென்பு புனைந்து பிசாசொடு
நாளு நடம் புரிவோன்
இத்தகு பித்தனை ஒரு காலம்மியில்
ஏற்றிய கையால் தொட்டு
இட்ட தவத்தால் தேவரின் மூவரின்
ஏற்றமுறச் செய்தாட்
சத்தி பராபரை வடிவுடைநாயகி
தாலோ! தாலேலோ!
தனிகர்கள் பரவிய வயிரவ பதியினள்
தாலோ! தாலேலோ!

∴ ∴ ∴

மற்ற தேசங்களில் ஒரு அரசனின் மனைவி அரசியாக முடியும். ஆனால் அரசியை மணந்து கொண்டவன் அரசனாக முடியாது நம் மீனாட்சி அம்மை அப்படியில்லை. பாண்டியன் மகளாகப் பிறந்து, கல்வி கற்று, அரசியாகி, அரசை வகித்து, நந்தி முதலான வர்களை வென்றும், உலகமெலாம் தொழும் கணவனுக்கு மாலை சூட்டியதல்லாமல் தன் மகுடத்தையே சூட்டி அரசளித்து அரச னாக்கி விட்டாள் என்பது இத்தேசத்தின் தனிச்சிறப்பு என்கிறார்

செழியர் பிரான் திருமகளாய்க் கலைபயின்று முடி புனைந்து
[செங்கோலோச்சி
முழுதுலகுஞ் செயங்கொண்டு திறைகொண்டு நந்தி கண
[முனைப்போர் சாய்த்துத்
தொழுகணவற்கணி மணமாலிகை சூட்டி தன்மகுடஞ் சூட்டிச்
[செல்வம்
தழைவுறு தன்னரசளித்த பெண்ணரசி அடிக்கமலம் தலை
[மேல் வைப்பாம்,

இப்பேர்ப்பட்ட அங்கயற்கண்ணியம்மையும் ஆலவாயப்பனும் அனைவரும் பதினாறுபேறும் பெற்று பெருவாழ்வு வாழ அருள்

வாராக! பதினாறு என்பது பதினாறு குழந்தைகளல்ல. இறைவன் அருளக்கூடிய பதினாறு கூறும் பாடல் இதோ!

சிவபெருமான் சன்னிதானத்தில் திருநந்திதேவர்

விண்ணப்பஞ் செய்தருளிய

## பதினாறுபேறு

மறைக ணிந்தனை சைவநிந் தணைபொரு மனமும்
தறுக ணைம்புலன் களுக்கேவல் செய்யுருச் சதுரும்
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும் 1
யாது நல்லன்பர் கேட்கினு முதவுறு மியல்பும்
மாத வத்தினே ரொறுப்பினும் வணங்கிடு மகிழ்வும்
ஓது நல்லுப தேசமெய் யுறுதியு மன்பர்
தீது செய்யினுஞ் சிவச்செய லெனக்கொளுந் தெளிவும் 2
மனமும் வாக்கு நின் னன்பர்பா லொருப்படு செயலும்
கனவி லும்உன தன்பருக் கடிமையாங் கருத்தும்
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நிலையும்
புனித நின்புகழ் நாடொறு முரைத்திடும் பொலிவும் 3
தீமை யாம்புறச் சமயங்க ளொழித்திடுந் திறனும்
வாய்மையாகவே பிறபொருள் விழைவுறு வளனும்
ஏமு றும்பர தாரநச் சிடாதநன் னோன்பும்
தூய்மை நெஞ்சின்யானெனதெனும் செறுக்குறுத்
துறவும் 4
துறக்கமீ துறையினு நரகிற் றோய்கினும்
இறக்கினும் பிறக்கினு மின்பந் துய்க்கினும்
பிறைக்கொழுந் தணிசடை பெருமவிவ்வரம்
மறுத்திடாதெனக்குநீ வழங்கல் வேண்டுமால் 5
துதிவாணி வீறு விசயம் சந்தானம் துணிவு தனம்
மதி தானியம் சவுபாக்கியம் போகம் அறி வழகு
புதிதாம் பெருமை யறங் குல நோயகல் பூண்வயது
பதினாறு பேறுந் தருவாய் மதுரைப் பராபரனே 6

.. திருவையாற்றுப்புராணம்.

என்னும் இப்பேர்ப்பட்ட செல்வங்களையளித்து நம்மை அங்கயற் கண்ணியம்மையும் ஆலவாயப்பனும் காப்பாராக. ஸ்ரீமீனாட்சி சுந்தரேசர் துணை.

பேசுமதுரம் பழுத்த தமிழ்ப்
 பிரச மருந்தும் களியளியே!
பெண்மைக் குணம் யாவுந் திரண்டு
 பெருகி நிறைந்த ஆலயமே!
மாசின் மறையாய் மந்திரமாய்
 மன்னு வேள்வி யாயவியாய்
வன்னியாகி யெச்சனுமாய்
 வயங்கா நின்ற மாச்சுடரே!
ஏசில் வடுகநாத புரத்து
 எந்த ஞான்றும் தணவாமே
இமையோரேத்த வீற்றிருக் கும்
 இனிய சுவைத் தீஞ்செழுங் கனியே!
ஆசு கலவா வடிவுடைய
 அமிழ்தே வருக வருகவே!
அகிலம் உயிர்த்த உயிர்க் குயிராம்
 அன்னே வருக! வருகவே!

—வடிவுடையம்மை பிள்ளைத்தமிழ்.

ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் துணை.

ஸ்ரீ பரஞ்சோதி மாமுனிவர் திருவடிகளே சரணம்.

தமிழ்ததாய் வாழ்க!

சுபம்! சுபம்! சுபம்!





## ஸ்ரீ மீனாட்சி அம்மை துதி.

பொன்னே! பொருந்தகற்புதமே பொலிந்தமென் பூந்
[திருவே!
தென்னே! சிறந்த செந்தேனே; திருந்தருட்சின்
[மயமே!
அன்னே! அமுதே! அருளே! அமரர்க்கரும்
[பொருளே!
மின்னே! வியன் சுடரே! மதுராபுரி மீனம்மையே.

## நூற்பயன்.

திங்களணி திருவாலவாயெம் மண்ணல் திருவிளை
[யாட்டி வையன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதிச் செல்வமோங்கித் தகைகை
[தருமகப்பெறுவர் பகையை வெல்வர்
மங்கல நன்மணம்பெறுவர் பிணிவந்தெய்தார் வாழ்
[நாளும் நனிபெறுவர் வானுடெய்திப்
புங் கவராயங்குள்ள போகமூழ்கிப் புண்ணியராய்ச்
[சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார்.

## வாழ்த்து.

மல்குக வேத வேள்வி! வழங்குக சுரந்து வானம்!
பல்குக வளங்களெங்கும்! பரவுக அறங்களின்பம்
நல்குக உயிர்கட்கெல்லாம்! நான் மறைச் சைவ
[மோங்கிப்
புல்குக! உலகமெல்லாம் புரவலன் செங்கோல்
[வாழ்க!

## ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் துணை.

## மங்களம்.

# Opinions on SRI RAMAKATHA SAGARAM

## SUNDARA KANDAM

Written by Ramakatha Ratna

**V. THYAGARAJAN.**

---

....You have, by your succinct and illuminating comments, rendered valuable help to the readers. You have, at every stage, pointed out the poetic achievements of Kambar and his supreme verbal felicity and adaptation of sound to sense. Let me congratulate you on your effort and wish your venture all success.

**Dr. Sri C. P. Ramaswami Iyer,**
Vice Chancellor, Annamalai University.

---

...I appreciate very highly the exposition of Sundara Kandam in Kamba Ramayana by Sri Ramakatha Rathna V. Thyagarajan.

**Sri K. S. Ramaswami Sastrial,**
Retired District Judge, MADRAS.

---

...சுருக்கமும் தெளிவுமான இந்நூல் கம்பன் காவியச் சோலையுள் நுழைவார்க்கு மலைப்பேற்படாமல் செய்வதுடன் கம்பனை முழுதும் கற்க வேண்டுமென்ற ஆவலை ஊட்ட வல்லதாகும். இத் திருப்பணியிலே பேரார்வமுடன் ஈடுபட்டு, ஈட்டும் பெரும் பொருளை நல்லறத்திற்கே ஈந்துவக்கும் இந்நல்லார்க்கு எல்லாம் வல்ல பரம்பொருள் எல்லா நலனையும் அருள வேண்டும்.

**திரு சா. கணேசன், M. L. A.**
கம்பர் கழகம். காரைக்குடி.

---

செந்தமிழ்ப் பதிப்பகம், புதுக்கோட்டை.